# மாநபியின் மவ்லித் ஷரீப்

## மார்க்கத்திற்கு

# அரணா? முரணா?

ஆக்கம்

T.S.A. அபூதாஹிர் மஹ்ழரி

வெளியீடு

ஃபஹீமியா பப்ளிஷர்ஸ்

வள்ளலார் நகர், கூடுவாஞ்சேரி–603 202.

| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | மாநபியின் மௌலித் ஷரீப் மார்க்கத்திற்கு அரணா? முரணா? |
| ஆசிரியர் | : | மௌலவி அபூதாஹிர் மஹ்ழரி |
| பதிப்பு | : | முதல் பதிப்பு<br>புனித ரபியுல் அவ்வல்<br>ஹிஜ்ரி 1425 மே 2004 |
| உரிமை | : | பதிப்பகத்தாருக்கே |
| பிரதிகள் | : | 2000 |
| ஹதியா | : | ரூ. 20.00 |
| வெளியீடு | : | Fahimiya Publishers<br>Khanka-e-Fahimiya<br>409/3-89D, Quaide Millath St,<br>Vallalar Nagar - Guduvancherry<br>Chennai - 603 202, Ph : 04114 267213. |
| அச்சுஅமைப்பு | : | Universal Software Solution<br>Graphic Division<br>No.1, Kasim Street, Royapettah,<br>Chennai-14. Ph : 52157568. |
| கிடைக்குமிடம் | : | Fahimiya Publishers<br>Sulaimaniya Publishers<br>Chennai - 1, Ph : 25270550 |

**எமது நெஞ்சம் நிறைந்த குருநாதர் அல்அரிப் பில்லாஹ், ஆஷிகுர்ரசூல், நூருல் ஹுதா, குத்புல் அக்தாப் ஹழ்ரத் செய்யிது காஜா ஃபஹீமுல்லாஹ் ஷாஹ் ஜிஸ்தியுல் காதிரி மத்தலில்லாஹுல் ஆலி அவர்கள் அகமுவந்தளித்த**

# ஆசியுரை

புகழனைத்தும், எம் நெஞ்சம் நிறைந்த கண்மணி நாயகத்தை, எமக்களித்த அல்லாஹ்விற்கு உரித்தாகுக !

ஸலவாத்தும், ஸலாமும், எம் உயிரினும் இனிய, ஸர்வரே ஆலம், ஸய்யிதுல் அனாம், குலாஸயே–காயினாத், மஃப்கரே மவ்ஜூதாத், அபுல் காஸிம் அஹ்மது முஜ்தபா, முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மீதும், அன்னவர்களின் அருமை குடும்பத்தவர்கள், அருமருந்த ஸஹாபாத் தோழர்கள், தாபியீன், தபஃ தாபியீன், ஆஷிகீன்கள், ஆரீபீன்கள், மற்றும் அண்ணலாரின் மீது பிரியம் கொண்டோர் அனைவர் மீதும் உண்டாகட்டுமாக ! ஆமீன்.

படைப்பினங்களின் கருவான, கண்மணி நாயகத்தின் மீது கொள்ளும் அன்பும், பாசமும், நேசமும்தான், ஒரு முஃமினின் ஈடேற்றத்தின் ஒரே ஈமானின் வழியாகும்.

# பொருளடக்கம்

பாரோர் மீது கருணையும், பிரியமும் கொண்ட, எம் பெருமானாரின் மீது, பிரியம் ஏற்படுத்தும், புனித மவ்லித் ஷரீபின் அகமியத்தை, அழகாக எடுத்துக் காட்டும் இனிய நூல் தான்.

“மாநபியின் மவ்லித் ஷரீப்ஃ மார்க்கத்திற்கு அரணா? முரணா? எனும் இவ்வழகு நூல்.

இந்நூலை உருவாக்கிய, எமதன்பு இளவல் அல்ஹாஜ், அல்ஹாபிழ், மவ்லவி அபுதாஹிர் ஆலிம் மஹ்ழரி ஜமாலி அவர்களுக்கு வல்லிறையேகன் நாயகத்தின் உண்மை இணைத்து, பேரன்பில் இணைத்து திழைத்து, பேரானந்தம் பெருகின்ற, பெரும் பேற்றை நஸீபாக்கி வைக்க துஆ செய்கிறேன். இன்னும் அரிய அகமிய நூல்களை உருவாக்கி, சமுதாயத்திற்கு சேவையாற்றவும், வாழ்த்தி பிரார்த்திக்கிறேன்.

மேலும், இந்நூலை படிப்போர்கள், பயன்பெற்று, நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நல்லன்பில் நனைந்து, நற்பேறு அடையவும் பிரார்த்திக் கிறேன்.

என்றும் வாழ்த்தி துஆ செய்யும்

(காஜா ஃபஹீமுல்லாஹ் ஷாஹ் ஜிஷ்தியுல் காதிரி)

காயல் பட்டணம், அல்ஜாமிவுல் கபீர் மஸ்ஜிதின் கதீபும், முஅஸ்கர் மகளிர் அரபிக்கல்லூரியின் முதல்வருமான மௌலவி, அல்ஹாஜ், அல்ஹாபிழ்

H.A. **அஹ்மது அப்துல்காதிர்** ஆலிம் மஹ்ழரி காதிரி அவர்கள் மனமுவந்தளித்த

## *மதிப்புரை*

எல்லாம் வல்ல அல்லாஹ்வின் பெயர் கூறி அருள்நாடி !
ஏந்தல் நபிகள் மீது ஸலவாதும் ஸலாமும் கூறி !

الحمد لله والصلاة والسلام على رسول الله

“மாநபியின் மவ்லிது ஷரீஃப் மார்க்கத்திற்கு அரணா? முரணா?” என்ற சீரிய நூலைப் பார்வையிட்டேன். குர்ஆன், ஹதீது வாசகங்களை இணைத்து தகுந்த ஆதாரங்களோடும் உவமானங்களோடும் தரப்பட்டிருக்கும் தகவல்கள் மிகச்சிறப்பாக இருக்கிறது.

இன்ஷா அல்லாஹ். இது நிச்சயமாக மக்களுக்கு மிகுந்த பயனுள்ளதாக அமையும்.

இக்காலத்திற்கு இது போன்ற நூற்கள் அவசியமும் அவசரமுமாகும். ஏனெனில் அறியாமை இருளில் சிக்கியுள்ளோரை மேலும் ஆழ்ந்த இருளில் அமிழ்த்திடும் வஹ்ஹாபிய நாசக் கொள்கையிலிருந்து விடுபடச் செய்ய அழகிய நடையும், உவமானம் கூறி விளங்க வைத்திடும் போங்கும் கொண்ட உரைகளும் நூற்களும் மிக அவசியமாகும். (எல்லாவற்றிற்கும் அல்லாஹ்வின் தவ்ஃபீக் அவசியம்.)

ٱدْعُ إِلَىٰ سَبِيلِ رَبِّكَ بِٱلْحِكْمَةِ وَٱلْمَوْعِظَةِ ٱلْحَسَنَةِ

"நுணுக்கமான நடைமுறைகளைக் கையாண்டும் அழகிய போதனைகளைக் கொண்டும் (மக்களை நேர்வழியின் பால்) அழையுங்கள்" என்றான் அல்லாஹ்.

குர்ஆன் ஷரீஃபின் நெடுகிலும் அருள் நபி கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை வல்ல அல்லாஹ் புகழ்ந்தேற்றுவதைக் காணமுடிகிறது.

நபிகளை புகழ்வது **சுன்னதுல்லாஹ்** அதாவது இறைவழி நபிகளை புகழத்துவக்கியதும் அவனே ! மறுமையில் அல்மகாமுல் மஹ்மூதிலே அவர்களை ஏற்றி வைத்து புகழின் உச்சியில் சிறப்பிப்பதும் அவனே !

எனவேதான் இத்தயை இறைவழியைப் பின்பற்றி நம் பெருமக்கள், நபி புகழை நிகழ்ச்சியாக மவ்லிதாக தந்துள்ளார்க்ள், அப்படி அவர்களைப் புகழ்வதற்கும் அல்லாஹ்வின் ஆசி (தவ்ஃபீக்) தேவை.

இதனை முன்வைத்தே இந்நூலை வழங்கியுள்ள அல்ஹாஜ் அல்ஹாஃபிழ் **T.S.A. செய்யிது அபூதாஹிர்** ஆலிம் மஹ்ழரி ஃபாழில் ஜமாலி அவர்களின் இம் முயற்சி வரவேற்புக்கும் நன்மைக்குரியதுமாகும்.

வல்ல அல்லாஹ் இதனை கபூல் செய்து (அங்கீகரித்து) இது போன்று இன்னும் பல நூற்கள் எழுதி வெளியிட அவர்களுக்கு அருள்வானாக.

வல்ல அல்லாஹ் யாவருக்கும் அருள்வானாக. ஆமீன்.

மஹ்ழரி

# என்னுரை

மாநபியின் மவ்லித் ஷரீப் மார்க்கத்திற்கு முரணானது. சுபுஹான மவ்லிதில் ஷிர்க் (?) உள்ளது. கவிதைகளே இஸ்லாத்தில் ஏற்புடையதல்ல. என்பன போன்ற தவறான வாதங்கள் இன்று பிரச்சாரங்களாகவும், பிரசுரங்களாக வும், மக்கள் மத்தியில் உலா வருகிறது.

அவர்களின் வாதங்கள் தவறு என்பதை நிரூபிக்கும் முகமாக எத்தனையோ நூல்கள் இதுவரையில் வெளிவந்திருக்கிறது. அந்த வரிசையில் நம் பங்கும் இடம் பெறவேண்டும் என்ற எண்ணத்தின் வண்ணமே இந்நூல்

இந்நூல்,மௌலிது ஷரீப் ஓதுவதை மறுக்கும் குழுவினருக்கு மறுப்பளிப்பது மட்டுமே நோக்கமாகக் கொண்டு எழுந்ததல்ல. அது நமக்கு அவசியமும் இல்லை.

ஆனாலும் நம் இனிய அன்பர்களில் கூட சிலர் இந்த தவறான வாதங்களின்பால் மோகம் கொண்டு செல்கின்றனரே, அவர்களின் ஐய்யங்களை தெளிவுபடுத்தும் வகையில் ஒரு காரணமாக இருக்கட்டுமே என்பதே இந்நூலின் நோக்கம்.

குர்ஆன், ஹதீஸ் இவைகளிலிருந்தே ஆதாரம் வேண்டும் என வாதிடுவோருக்கு, குர்ஆனும் ஹதீஸுமே மாநபியின் மவ்லிது தான் என சான்றுகளை சமர்ப்பிக்கும் இந்நூலே இன்னொரு மௌலிது காவியமாக அமைய வேண்டும் என்பதும் எம் நோக்கமாகும்.

இந்நூல் உதயமாக, இதயபூர்வமான ஆசிகளையும், வாழ்த்துக்களையும் தூவி மலரொத்தமென் கரத்தால் வருடி, புன்னகை பரிசளித்து என்னை பூரிப்படையச் செய்த என் இதயத்து வேந்தர், எஜமான் ஆன்மீக குருநாதர்

**அல்அரிப் பில்லாஹ், ஆஷிகுர்ரசூல், நூருல் ஹுதா, குத்புல் அக்தாப் ஹழ்ரத் செய்யிது காஜா ஃபஹீமுல்லாஹ் ஷாஹ் ஜிஸ்தியுல் காதிரி மத்தலில்லாஹுல் ஆலி அவர்களின் பாத மலர்களில் என் நயனம் குளிர்ந்த நன்றிகளை சமர்ப்பிக்கிறேன்.**

இந்நூலை அழுகுற அச்சமைத்து வெளியிட்ட **ஃபஹீமிய்யா பப்ளிஷர்ஸ்** அங்கத்தவருக்கும் என் அகமார்ந்ந நன்றிகள்.

இந்நூலின் நிறை குறைகளை எமக்கு தெரியப்படுத்தும் அன்பர்களும் என் மனமுவந்த நன்றிக்குரியவர்கள்.

## பொருளடக்கம்

ஆருயிர் அண்ணலின் நேசத்தை நெஞ்சத்தில் விதைத்திட இந்நூல் துணை புரிய வேண்டும் என்ற பிரார்த்தனைகளோடும்,

இந்நூலின் வழியே ஒரேயொரு நபர் உண்மை உணர்ந்தாலும் அதுவே யான் பெற்ற பயன் என்ற நல் ஆதரவோடும் இந்நூலை மக்கள் மன்றத்தில் சமர்ப்பிக்கிறேன். இச்சிறிய முயற்சியை பெருங் கருணையாளனான அல்லாஹ் பொருந்திக் கொள்வானாக ஆமீன்.

இந்நூலுக்கு மதிப்புரை வழங்கிய காயல்பட்டணம் பெரிய குத்பா பள்ளியின், கதீபும் காயல் பட்டணத்தின் கல்வி புரட்சியாளராகவும், சுன்னத்வல் ஜமாஅத்தின் சான்றோர் வீரராகவும் திகழும் என் அன்பு ஆசான் **மௌலானா, மௌலவி, அல்ஹாஜ் அல்ஹாபிழ் S.A. அஹ்மது அப்துல் காதிர் ஆலிம் மஹ்ழரி, காதிரி** அவர்களுக்கும் என உள்ளார்ந்த நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

இந்நூல் வெளிவர அகமலர்ந்து ஆலோசனைகளை வழங்கிய அன்பர்கள் யாவருக்கும் என்றென்றும் என் நன்றி. வஸ்ஸலாம்

தங்கள் அன்பின்

**T.S.A. அபுதாஹிர் மஹ்ழரி**

**இபுனு**

**சுல்தான் அப்துல் காதிர் பக்ரி**

# பதிப்புரை

அருள் புரியும் அல்லாஹ்வுக்கே அனைத்தும் புகழும் அல்ஹம்துலில்லாஹ்

மருள் நீக்கும் மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது இதயமார்ந்த ஸலவாத்து ஸலாம் கூறி துவக்கம்

நமது முன்னோர்களான மஹான்கள், இறை நேசர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது கொண்ட தணியாத காதல் தாகத்தில் வடித்த காவியங்களே இந்த மௌலிது ஷரீபுகள் என்பதை ஒவ்வொரு முஸ்லிமான முஃமினான யாவரும் அறிய வேண்டியது அவசியமாகும்.

இல்லங்கள் தோறும் ஓதிபயன் பெற வேண்டிய இக்காவியங்களை விட்டும் மக்கள் பாராமுகமாக இருப்பது அபாக்கிய சூழ்லுக்கு வழி வகுக்கும்.

மௌலிது ஷரீபுகள் அல்குர்ஆன் வல்ஹதீஸ் ஒளியில் மிளிரும் தீபங்களே ஆகும் என்பது போன்றே அவசியம் அறிய வேண்டிய அரிய தகவல்களை மக்கள் மன்றத்தில் முன் வைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் எழுந்ததே இந்நூல்

இந்நூலை தொகுத்த அன்பர் மௌலவி, அல்ஹாஜ், அல்ஹாபிழ் **T.S.A. செய்யிது அபூதாஹிர்** ஆலிம் மஹ்ழரி பாஜில் ஜமாலி அவர்களுக்கு எமது இதயமார்ந்த நன்றிகள்.

மத்ரஸா மாணவ மாணவியருக்கு அன்பளிப்புகள் வழங்கவும் இந்நூல் உகந்ததாக அமைந்திருக்கிறது.

அன்பர்கள் இந்நூலை அவசியம் வாங்கி தானும் படித்து பிறரையும் படிக்கத் தூண்டுமாறு வேண்டுகிறோம்

சுத்த சுன்னத் வல்ஜமா அத்தின் சுகந்த சித்தாந்தங்களை தாங்கி இன்னும் பல நூல்களை வெளியிடவருக்கும் எமது **பஹீமியா பப்ளிஷர்ஸ்** நிறுவனத்திற்கு உங்களின் நல் ஆதரவுகளையும் உறுதுணைகளையும் தொடர்ந்திட வேண்டுமாய் அன்புடன் வேண்டுகிறோம்.

வஸ்ஸலாம். **– பஹீமிய்யா பப்பளிஷர்ஸ்**

## சமர்ப்பணம்

இந்நூலை, எம் நெஞ்சம் நிறைந்த ஆத்மீக ஞானமஹான், ஆஷிகே ரஸூல், ஆரிப்பில்லாஹ், நூருல் ஹுதா, ஹஜ்ரத் **காஜா ஃபஹீமுல்லாஹ் ஷாஹ் ஜிஷ்தியுல் காதிரி**, அவர்களின் கல்பில் நிறைந்த, அருமருந்த குருமார்களான குத்போ இர்ஷாத் ஹஜ்ரத் **ஆரிபுல்லாஹ் ஷாஹ் ஜிஷ்தியுல் காதிரி**, குத்பே தோஆலம், ஹஜ்ரத் **காஜா ஹபீபுல்லாஹ் ஷாஹ், ஜிஷ்தியுல் காதிரி** அபுல் ஹுதா, ஹஜ்ரத் **காஜா கலிமுல்லாஹ் ஷாஹ், ஜிஷ்தியுல் காதிரி,** கத்தஸல்லாஹு அஸ்ராரஹும், மற்றும் எம் காதிரிய்யா, ஜிஷ்திய்யா, நக்ஷ்பந்திய்யா, சுஹ்ரவர்திய்யா, ஸனூஸிய்யா ஷெய்குமார்களின் புனித ஆத்மாவிற்கு சமர்ப்பணம் செய்கிறேன். – ஆசிரியர்

# உள்ளே

# மாநபியின் மவ்லிது ஷரீப் மார்க்கத்திற்கு அரணா? முரணா?

மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது மௌலிது ஷரீப் எனும் புகழ்ப்பாக்கள் பாடலாமா? அவைகளுக்கு குர்ஆன் ஹதீஸில் ஆதாரம் உண்டா? என்பது வரும் விபரமற்ற வினாவாகும்.

குர்ஆன், ஹதீஸ் இவ்விரண்டுமே பூமான் நபியின் புகழுக்கு ஆதாரங்கள்தான்.

இவ்வுலகில் மனிதக் கரங்களின் ஊடுருவலுக்கு உட்படாமல் காலங் காலமாக கவினுயர் குர்ஆன் காக்கப்பட்டு வருவதே கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வழங்கப்பட்டதால்தான்.

ஒவ்வோர் இறைத் தூதருக்கும் சில அற்புதங்கள் வழங்கப்பட்டன அவற்றைக் காணும் மக்கள் நம்பித்தான் ஆகவேண்டியதிருந்தது. எனக்கு வழங்கப்பட்ட அற்புதமெல்லாம் எனக்கு அல்லாஹ் அருளிய வேத அறிவிப்பு (வஹீ) தான். ஆகவே மறுமைநாளில் பின்பற்றுவோர் அதிகம் உள்ள நபியாக நான் இருக்க வேண்டும் என எதிர்பார்க்கிறேன்.

அறிவிப்பாளர்: அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு
நூல்:புகாரி ஷரீப் 498.

மேற்கண்ட இப்பொன்மொழியின் வழியே குர்ஆன் என்பது வாழ்வு நெறி போதிக்கும் வான்மறையாயினும் வள்ளல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புகழ்பாடும் அற்புதப் பேழையே ஆகும் என்பதை அவசியம் உணர்ந்தாக வேண்டும்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அருளப்பட்டதன் மூலம் அல்குர்ஆன் புகழ் பெறுகிறது.

பூமான் நபியின் புகழ்பாடும் புனித மௌலிது காவியங்களில் முதன்மையானது குர்ஆனே என்பது மறுக்க முடியா உண்மையாகும். அருள் மறையின் திருவசனங்கள் நெடுகிலும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அழகுப் புகழையே, விண்டுரைக்கின்றன என்பது உலகம் ஒப்புக்கொண்டே ஆகவேண்டிய உண்மையாகும்.

அல்ஹதீஸ் என்பது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்ன, செய்த, பிறர் செய்ததைப் பார்த்து அங்கீகரித்தவைகளுக்குக் கூறப்படும்.

مَا يَنْطِقُ عَنِ الْهَوٰى ۝ اِنْ هُوَ اِلَّا وَحْيٌ يُّوْحٰى ۝

அவர்கள் எதையும் சுயமாகப் பேசமாட்டார்கள். அவர்களின் பேச்சுக்கள் யாவுமே இறைவசனங்கள்தான்

அண்ணலின் பேச்சு அல்லாஹ்வின் பேச்சே என்று அருள்மறை மூலமே அல்லாஹ் உறுதிபடுத்துகிறான்.

(53 : 3,4)

ஹதீஸ் என்பது அண்ணல் நபியின் கன்னல்மொழிகள் என்று அகிலமே அறிந்து வைத்திருக்கிறது. அதுவும் அல்லாஹ்வின் வார்த்தைகளே ! என்று அறிவிப்பதன் மூலம் ஹதீஸையே மௌலிதாக மாண்பேற்றி மெருகூட்டுகிறது மாமறை.

அரபு நாட்டிலே மக்கா எனும் சிறிய கிராமத்திலே பிறந்த ஒரு தனி மனிதரின் வாழ்வையே ஆதாரமாகக் கொண்டு அகிலமே அசைகிறதென்றால் அந்தப் புனிதரைப் புகழ்வதற்கு ஆதாரம் வேறு அவசியமோ?

அரசியலானாலும், ஆன்மீகமானாலும், குடும்பவியலா னாலும், கொடுக்கல் வாங்கலானாலும், விஞ்ஞானமா னாலும், மெஞ்ஞானமானாலும் அத்தனைக்கும் தாயகமாய் அமைந்தது அண்ணல் நபி நாயகத்தின் அருமந்த வாழ்வல்லவா?

அறுபத்தி மூன்றாண்டு வாழ்வில் ஈருலகிலும் ஈடேற்றம் பெறும் அரியவழியை, எளிய முறையில் அமைத்து தந்ததாலன்றோ, உலகம் இன்றளவும் அந்தப் பாதையிலே பயணித்து வருகிறது.

வாழ்வில் எழும் பிரச்சனைகளுக்கு விடைகாண அவர்களின் வாழ்க்கைப் புத்தகமல்லவா புரட்டப்படுகிறது? அவர்களின் அங்க அசைவுகளல்லவா இன்று விஞ்ஞானம் என்றும் மெஞ்ஞானம் என்றும், மருத்துவம், என்றும் மனோ தத்துவம் என்றும் பெயர் மாறி மாறி வருகிறது.

صَلُّوْا كَمَا رَاَيْتُمُوْنِيْ اُصَلِّيْ

நீங்கள் என்னை எவ்வாறு தொழக் கண்டீர்களோ அவ்வாறே நீங்களும் தொழுங்கள்.

பூமான் நபியவர்கள் இப்படித்தான் தக்பீர் கட்டினார்கள் எனவே நானும் அப்படியே கட்டுகிறேன். இப்படியே ருகூவு செய்தார்கள். ஸுஜுது செய்தார்கள் என்று தொழுகையின் ஒவ்வொரு அசைவிலும் மாநபியவர்கள் நினைவு கூறப்படுகிறார்களே ! அதுவே மவ்லிதுதான் !

மாட்டேன் ! மாட்டேன் ! என்றாலும் நாளுக்கு ஐந்து முறையாவது மாநபியின் பெயரை முழங்காமல் தொழ முடியாதே !

சாம்பிராணிப் புகைபோட்டு, மக்கள் சூழ அமர்ந்து ஓதுவதற்கு மட்டும் தான் மௌலிது என்று பெயரில்லை.

எம்மானை நினைக்காமல் இஸ்லாத்தில் எதை நிறைவேற்ற முடியும். ஆரம்ப கலிமாவே அண்ணலின் மவ்லிது தானே

لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ مُحَمَّدٌ رَّسُوْلُ اللّٰهِ

அல்லாஹ்வேயன்றி வணங்கத் தகுந்தவன் வேறுயாருமில்லை. முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் தூதராக இருக்கிறார்கள்.

இருந்தார்கள் என்று சொல்லவில்லையே இருக்கிறார் கள் என்று தானே சொல்கிறோம். அதுவே மவ்லிது தானே.

இரண்டாம் கலிமாவில் அல்லாஹ்வையன்றி வணங்கத் தகுந்தவன் வேறு யாருமில்லை என்று சாட்சி கூறுகிறோமே. அந்த அல்லாஹ் யார்? எங்கே இருக்கிறான். எப்படியிருக்கிறான் என்று யார் போய்ப் பார்த்தது ? நேரிலே பார்க்காமல் எப்படி சாட்சி சொல்கிறோம். அண்ணல் நபியவர்கள் சொன்னதால் தானே. அவர்கள் பார்த்துச் சொன்ன சாட்சியை நாமும் சொல்லி இஸ்லாமிய கப்பலில் பயணம் செய்கிறோம். இல்லையேல் நிராகரிப்புக் கடலில் மூழ்கியிருப்போம்.

நாம் சுவாசிக்கும் இஸ்லாமியக் காற்று இறுதித் திருநபி தந்தபிச்சை தானே.

லாயிலாஹ இல்லல்லாஹ் என ஆயிரம் முறை சொன்னாலும் முஹம்மதுர் ரசூலுல்லாஹ் என ஒரு முறை சொல்லாதவரை எப்படி முஸ்லிமாக முடியும்?

அடிமைகள் நாம் அரசரைப் புகழ ஆதாரம் வேறு தேவையோ?

வேண்டாம் விடுங்கள் அவர்களைப் புகழத்தேவை யில்லை என்போரே. பின்னர் புகழுக்குத் தகுதியானவர் தான் யார்?

படைத்த அல்லாஹ்வே! பாசநபியை புகழ்ந்து கொண்டிருக்கிறான். பரதேசிகள் நாம் புகழ ஆதாரம் வேண்டுமோ?

வனவிலங்குகளும், மரங்களுமே! மாநபிக்குச் சிரம்பணிந்து மவ்லிது ஓதுகிறது. ஆறறிவு மனிதா! உன் பகுத்தறிவு மட்டும் ஏன் பாழ்பட்டுவிட்டது?

அபூஜஹ்லும், அபூலஹபுமே, அருமை நபி மீது புகழ் ஓதியபோது ஆபிதீன் உனக்கு ஆதாரம் வேண்டுமோ?

## ஏந்தல் நபியை ஏன் புகழ வேண்டும்

பூமான் நபியை நான்தான் வளர்த்து வாலிபமாக்கி னேன் என்று யாரும் கூறிவிட முடியாத படி, பிறப்பதற்கு முன்னரே பிதாவையும், அரும்பும் பருவத்தில் அன்னையை யும் மரணிக்கச் செய்த இறைவனே! அண்ணலை அரவணைத்து வளர்த்தான். அண்ணலின் மூலம் அந்தப் புகழைத் தனக்கே சூட்டி மகிழ்கிறான் இறைவன்.

கருணை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கல்வி போதித்த பெருமையையும் அல்லாஹ் தனக்கே தேர்ந்தெடுத்துக் கொண்டான்.

அண்ணலாருக்கு நானே ஆசிரியன் என்று, எந்த மனிதரின் நாவிலும் வரமுடியாத வகையில் அந்தப் புகழுக்குரியவனாக அல்லாஹ் தன்னையே அறிமுகப்படுத்திக் கொண்டான்.

هُوَ الَّذِيٓ أَرْسَلَ رَسُولَهُۥ بِالْهُدَىٰ وَدِينِ الْحَقِّ

அவனே தன் தூதரை நேர்வழியுடனும், சத்திய மார்க்கத்துடனும் அனுப்பி வைத்தான். (9 : 32)

هُوَ الَّذِي بَعَثَ فِي الْأُمِّيِّـنَ رَسُولًا مِّنْهُمْ

அவன் தான் உம்மிகளிடையே ஒரு தூதரை அவர்களிலிருந்தே தோற்றுவித்தான் (62 : 02)

இது போன்ற திருவசனங்களின் மூலம் அந்த ரஸூலை அனுப்பிய அல்லாஹ் தான் நான் என்று தன்னை அறிமுகப்படுத்தி, அண்ணலின் மூலம் புகழ் பெறுகிறான் அந்த புகழுக்குரிய நாயன்.

மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்ததால் மக்கா புகழ் பெற்றது. மாநபியை சுமந்ததால்

மதீனா மணம் பெற்றது. மாநபிக்கு அருளப்பட்டதால் அருள்மறை குர்ஆன் கீர்த்தி பெற்றது. அண்ணலின் மார்க்கம் என்பதால் இஸ்லாம் எழுச்சி பெற்றது. அண்ணலின் தோழர்கள் என்பதால் ஸஹாபிகள் நபிமார்களுக்கு அடுத்த சிறப்பைப் பெற்றனர் உத்தமநபியின் உம்மத்துக்கள் என்பதால்தான் உம்மத்தே முஹம்மதிய்யா உயர்வு பெற்றது.

பூமானின் பாதம் பட்டதால் பூமி புகழ் பெற்றது. வள்ளலின் பாதம் பட வேண்டுமென வானம் ஆசை பட்டதால் தான் இறைவன் மாநபியின் சந்திப்பை வானத்திலே வைத்தான். அதன் மூலம் வானம் வருகை பெற்றது.

இப்படி அனைத்துப் புகழுமே அண்ணலைக் கொண்டு அமைத்து வைத்திருக்கிறான் அல்லாஹ்.

அவ்வாறிருக்க அண்ணலை நாம் புகழ்ந்து தான் அவர்கள் புகழ் உயர வேண்டும் என்று நினைப்பது அறிவீனமாகும்.

## பின்னர் ஏன் நபியை புகழ வேண்டும்?

என்ற கேள்வி எழலாம். ஆனால் அது நாம் நமக்கு நன்மை சேர்ப்பதற்காகவேயன்றி, நபிக்குப் புகழ் சேர்ப்பதற்காகவோ அவர்களின் புகழை உயர்த்துவதற்காக வோ அல்ல.

அண்ணலின் புகழ் எப்பொழுது குறைந் திருந்தது நாம் கூட்டுவதற்கு?

யார் யார் புகழ்கிறார்களோ அவரவர்களுக்குத்தான் பெருமையும் புகழும் விரிவடையும் என்பதை நிரூபிக்கும் நிதர்சனத் தகவலை தருகிறோம் பாருங்கள்.

مَا إِنْ مَدَحْتُ مُحَمَّدًا بِمَقَالَتِيْ
لٰكِنْ مَدَحْتُ مَقَالَتِيْ بِمُحَمَّدِ

என் கவிதையைக் கொண்டு ஏந்தல் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புகழ் பெற வில்லை, அவர்களை புகழ்வதால் என் கவி புகழ் பெறுகிறது.

இதைச் சொன்னது யார்? அண்ணல் நபியின் அவைப்புலவராக அங்கீகாரமும், அறிமுகமும் பெற்ற ஹஸ்ஸான்பின் தாபித் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள்.

உண்மையில், அண்ணலைப் புகழவில்லையெனில் இந்த ஹஸ்ஸான் அவர்களை யாருக்குத் தெரியும்? போர்வைக் கவிஞர் ‘கஅபு இபுனு ஸுஹைர்’ அவர்களாவது வரலாற்றில் இடம் பெற்றிருப்பார்களா?

# யார் அந்த மைக்கேல் H. ஹார்ட்

உலக சாதனை படைத்த தலைவர்களை ஆய்வுசெய்த அறிஞர் மைக்கேல் H. ஹார்ட் தான் எழுதிய **The Hundred** என்ற நூலில் முத்தான முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை முதல் தலைவராக பிரசுரித்தார் என்ற செய்தி அனேக மேடைகளில் பேசப்பட்டு வருகிறது.

ஆனால் அதன் மூலம் அண்ணலுக்கு புகழ் உயருவதாக ஒருவன் கருதினால். அவனின் சிந்தனை சீர்செய்யப்பட வேண்டும்.

ஏனெனில் முதல் நபராக முஹம்மது நபியை தேர்வு செய்யவில்லையெனில் அந்த மைக்கேல் ஹார்ட் என்ற அறிஞரை யாருக்குத் தெரியும் ?

மைக்கேல் ஹார்ட் புகழ் பெற்றது பெருமானை புகழ்ந்ததாலல்லவா? அது போன்றே அண்ணலை புகழ்ந்தவர்கள் புகழ் பெறுகின்றனர்.

குழந்தைகள் பிறந்த உடன் அக்குழந்தையை நீராட்டி சுத்தப்படுத்துவதுண்டு. அப்படியே மாநபியவர்கள் பிறந்த போதும் நீராட்டினார்கள். ஆனால் பூமான் நபியின் புனித மேனியில் பட்டு தண்ணீர் தான் தன்னை சுத்தப்படுத்திக் கொண்டது.

# புகழப்பிறந்தவர்

மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மகத்தான நாமமான முஹம்மது என்பதை திருமறையில் நான்கு இடங்களிலும் அஹ்மது என்பதை ஒரு இடத்திலும் உரைத்திருக்கிறான் வல்லநாயன்.

ஏந்தல் நபியவர்களுக்கு எத்தனையோ சிறப்புத்திரு நாமங்கள் இருப்பினும் அத்தனையிலும் அதிகம் உபயோகிக்கப்படும் நாமங்கள் இவைகள் தான். முஹம்மது என்றால் புகழப்பட்டவர், அஹ்மது என்றால் அதிகம் புகழ்பவர் என்பது இவ்விருநாமங்களின் இனிய பொருளாகும்.

இகழ நினைப்பவர்களின் நாவிலே கூட புகழப்பட்டவர் என்ற பொருள் கொண்ட முஹம்மது என்ற நாமத்தை நடமாடச் செய்த இறைவன் எத்தகையவன்? அதை அருமை நபியின் வாய்வழியாகவே கேட்போம் வாரீர்

குறைஷிகளின் திட்டுதலையும், அவர்களின் சபித்தலையும் என்னை விட்டு அல்லாஹ் எப்படி திருபபி விடுகிறான் என்பது உங்களுக்கு ஆச்சரியமில்லையா? (என்னை) முதம்மம் (இகழப்படுபவர்) என்று ஏசுகிறார்கள். சபிக்கிறார்கள். ஆனால் நானோ முஹம்மது (புகழப்படுபவர்) ஆவேன் (புகாரிஷரீப் 3533)

புகழப்பட்டவர் என்ற பெயரையே பெற்ற பெருமானாருக்கு இனிமேல் தான் புகழ் உயர வேண்டும் என்பதோ, நாம் புகழ்ந்துதான் அவர்களின் புகழ் உயர வேண்டும் என்பதோ கிடையாது. இனியாராலும் புகழ முடியா விதத்தில் அல்லாஹ்வே அவர்களைப் புகழ்ந்துக் கொண்டேயிருக்கிறான். படைப்புகளைப் படைக்கும் முன்னும், படைப்புகள் அழிந்த பின்னும் ஆதியோ, அந்தமோ இல்லாத நித்திய ஜீவனான நாயன் தன் நேசர் மீது ஸலவாத் எனும் புகழ்மாலைகளைச் சூடி மகிழ்கிறான்.

وَرَفَعْنَا لَكَ ذِكْرَكَ ۝

நபியே ! உங்கள் கீர்த்தியை நாம் உயர்த்திவிட்டோம் என்றுரைக்கிறான். (94 : 4)

திருமறை விரிவுரையாளர்களின் தலைவர் ஹழ்ரத் இபுனுஅப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹுமா அவர்கள் இவ்வசனத்திற்கு தரும் விளக்கமாவது, அதானிலும் இகாமத்திலும், அத்தஹிய்யாத்திலும், குத்பாவிலும் பூமானின் பெயர் கூறப்படுவதாகும் என்றுரைக்கிறார்கள். மேற்கூறப்பட்ட இந்த நான்குமே இறை வணக்கமான தொழுகையைச் சார்ந்ததாகும்.

அல்லாஹ்வின் வணக்கமாக இருப்பினும் கூட அங்கே அண்ணல் நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

அவர்கள் நினைவு கூறப்பட வில்லையெனில் இவைகளில் எதுவுமே இறைவனால் அங்கீகரிக்கப்படாது என்பது சட்ட நிபுணர்கள் தரும் தீர்ப்பாகும்.

இப்படி பல்வேறு வசனங்களின் மூலம் பூமான் நபியின் புகழை உயர்த்தி வான்மறையையே மெளலிது காவியமாகச் சூடி மகிழ்கிறான் இறைவன்.

அண்ணலாரின் புகழ் பாடுவதில் தான் அவனுக்கு எத்தனை ஆசை எனவேதான் சுவனத்தின் வாசலில் முஹம்மது எனும் திருநாமத்தை பதித்து அதைப் பார்த்துப் பார்த்துப் பரவசம் அடைகிறான்.

அவர்களின் அழகு புகழை அவன் ஓதியதோடு மட்டுமின்றி அவனின் தீர்க்க தரிசிகளான அருமை நபிமார்களையும் பூமானின் புகழ் ஓதச் சொன்னான். அதை ஒப்புக் கொண்ட நபிமார்களிடம் வாக்குறுதி கேட்டு சாட்சிகளையும் நியமித்து, அவனும் ஒரு சாட்சியாளரான அமைந்திருக்கிறான் அதை பின்வரும் வசனம் பறைசாற்றுகிறது.

அல்லாஹ் நபிமார்களிடம் இவ்வாறு உறுதிமொழி வாங்கிய நேரத்தை நினைவுக்கூறுங்கள். நான் இப்போது உங்களுக்கு வேதத்தையும், நுண்ணறிவையும் வழங்கியிருக்கின்றேன். இனி ஏற்கனவே உங்களிடமுள்ள

அறப்போதனைகளை மெய்படுத்தக்கூடிய மாண்பான இறைத்தூதர் உங்களிடம் வரும்போது அவசியம் அவர் மீது நம்பிக்கை கொண்டு நீங்கள் அவருக்கு உதவி புரிந்திடவும் வேண்டும். (இவ்வாறு கூறிவிட்டு) அல்லாஹ் வினவினான். இதனை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா? மேலும் இதற்காக என்னுடன் நீங்கள் செய்துக் கொண்ட பெரும் ஒப்பந்தத்தை (அதனால் ஏற்படும் மாபெரும் பொறுப்புக்களை ஏற்றுக் கொள்கிறீர்களா?)" அவர்கள், "(ஆம்) நாங்கள் ஒப்புக் கொள்கிறோம்" என்றார்கள். அல்லாஹ் கூறினான். "அப்படியானால் நீங்கள் (இதற்கு) சாட்சியாக இருங்கள். நானும் உங்களோடு சாட்சியாக இருக்கின்றேன்.

அத்தோடு மட்டுமின்றி அருமை வானவர்களும், அண்ணலின் புகழை என்னுடன் ஓதுகின்றனர் என எழில் மறை மூலமே எடுத்துரைக்கிறான்.

إِنَّ اللَّهَ وَمَلَائِكَتَهُ يُصَلُّونَ عَلَى النَّبِيِّ يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا صَلُّوا عَلَيْهِ وَسَلِّمُوا تَسْلِيمًا

நிச்சயமாக அல்லாஹ்வும், அவனது அமரர்களும் நபியின் மீது ஸலவாத் சொல்கின்றனர். விசுவாசிகளே நீங்களும் அவர் மீது ஸலவாத்தும் ஸலாமும் சொல்வீர்களாக. (33 : 56)

மணக்கும் இம்மறை வசனத்தின் மூலம் விசுவாசிகளான நம்மையும் பூமான் நபிமீது புகழ்மாலை (ஸலவாத்) ஓதப் பணிக்கிறான்.

அப்படி ஓதினால் 10 நன்மைகள் பதியப்பட்டு 10 தீமைகள் அழிக்கப்பட்டு, 10 அந்தஸ்த்துக்கள் உயர்த்தப் படுகிறது, என்றும் அண்ணல் மூலமே அறிவிக்கச் செய்தான்.

மாநபியின் பெயர்களில் எதைச் சொன்னாலும் கூடவே ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் என்று ஸலவாத் கூறுகிறோமே அதுவே மௌலிதுதான். நமது இனிய இஸ்லாத்தில் மறதியாக செய்துவிட்ட, செய்யாதுவிட்ட எதுவும் குற்றமாக கருதப்படாது என்பது பொது விதி. ஆனால் பூமான் நபியின் பெயர் கேட்டு ஸலவாத் கூற மறந்தவரின் கதியை மாநபியே கூறுகிறார்கள். கேளுங்கள்.

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ مَنْ نَسِيَ الصَّلَاةَ عَلَيَّ نَسِيَ طَرِيقَ الْجَنَّةِ

யார் என்மீது ஸலவாத் கூற மறந்தானோ அவன் மறுமையில் சுவர்க்கம் செல்லும் பாதையையே மறந்து விடுவான். (அஷ்ஷிபா)

வாழும் காலையில் நற்செயல்கள் புரிந்து அந்தச் செயல்கள் அல்லாஹ்வால் அங்கீகரிக்கப்பட்டு சுவனவாதியாக நிர்ணயிக்கப்பட்ட ஒரு மனிதன், அதன் பாதையைத் தெரியாமல் தடுமாறுவதற்கு ஸலவாத்தை மறந்தது தானே காரணம்? ஸலவாத் என்பதும் மௌலிது என்பதும் ஒரே கருத்தையே தரும் இரு வார்த்தைகள் என்பதையும் நாம் நினைவில் நிறுத்த வேண்டும்.

## கவிதைகள்

இறைவனால் அங்கீகரிக்கப்பட்ட இனிய நல்மார்க்க மாம் இஸ்லாத்தில் கவிதைகள் தீண்டத்தகாத தல்ல. மாறாக வரம்புகளுக்கும், உண்மை நெறிகளுக்கும் உட்பட்ட கவிதைகள் இஸ்லாத்தில் வரவேற்கப்பட்டது மட்டுமின்றி, வலியுறுத்தப்பட்டும் உள்ளது என்பதை எழில் மறை குர்ஆனிலும், ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் இனிய மொழிகளிலும், நெடுகவே நிறைந்திருப்பதை ஆய்வு செய்த அறிவுலக மேதைகள் தம் ஏடுகளில் வரைந்து வைத்திருக்கின்றனர்.

ஆனால் கவிதைகள் இஸ்லாத்திற்கு அப்பாற்பட்டது போன்றும், கவிஞர்கள் இஸ்லாத்தின் எதிரிகள் போன்றும் மாயத் தோற்றத்தை ஏற்படுத்தி, தாம் கூறும் தவறான கருத்தை வலுவூட்டும் வகையில் குர்ஆனையும்,

ஹதீஸையும் வளைத்து அதன் அர்த்தங்களை அனர்த்தமாக்கி திரித்து கெடுவிளையாடல் செய்யும் கூட்டத்தினர் தான் இன்று பூமான் நபியின் புகழ் பாடும் புனித மௌலிதுக் காவியங்களையும் புருவ முயர்த்திப் பார்க்கின்றனர். தான் அறியாமலும், அறிய முயலாமலும், அரிய மேதைகளான மேன் மக்கள் இம் மேதினியில் விட்டுச் சென்ற மௌலிதுகளை சாடி, கவிதைகள் தானே என்று உதாசீனப் படுத்தி பே(ஏ)சி வருகின்றனர்.

கவிதை என்பது ஒரு மனிதன் தான் சார்ந்திருக்கும் மொழியில் தமக்கிருக்கும் புலமையை வெளிக்கொணரும் கருவியே ஆகும்.

தனக்குப்பிடித்த, தன்இதயத்தைக் கவர்ந்த எதையும் அதன் தகுதிக்கேற்றவாறு புகழ்தல் எப்படி தவறாகும். இன்னும் சொல்வதானால் அது மனித இயல்புகளில் மகத்தான இயல்பாகும்.

அதையே சற்று கருத்துச் செறிவோடும், மொழி வளத்தோடும் உபயோகித்தால் அதே வார்த்தையே கவிதையாகக் காட்சியளிக்கிறது.

வாழ்வு நெறி போதிக்கும் வான் மறை குர்ஆனே ஓர் அற்புதக்காவியம் தான் என்றால் அது மிகையல்ல! அதன் சிங்க நடையும், சிங்காரத் தென்றல் நடையும் அருவிபோல்

பொழியும் அழகு நடையும், ஆறுபோல் இரைந்தோடும் அதீத நடையும், அமைதி நடையும் காண்போரை கவர்ந்திழுக்கும் காந்த நடையும் கண்டு, கவிதை உலகமே இன்று மெய்சிலிர்த்து மூக்கின் நுனிமேல் விரல் வைத்து வியந்து நிற்பதை இதயமுள்ளோர் ஏற்றுத்தான் ஆகவேண்டும்.

இலக்கிய அறிவென்னும் இன்ப ஆழியில் மூழ்கி முத்தெடுத்த கவிஞர்கள் வாழ்ந்த காலத்திலேயே குர்ஆன் அறை கூவல்கொடுத்து, இதுபோன்று ஒரு சூராவையேனும், கொண்டுவாருங்கள் பார்க்கலாம் என சவால் விடுத்தது.

அன்று விடப்பட்ட சவால் இன்று வரை சவாலாகவே இருப்பதுதான் அகிலம் கண்ட அதியற்புதம்.

முழு உலக முன் மாதிரியாய் பரிணமித்து பாரோர்க்கு மகத்தான எடுத்துக்காட்டாக தம் அங்க அசைவுகளை அமைத்து அவனிக்கு வழங்கிய வள்ளல் நபியின் வாழ்வு ஒரு திறந்த புத்தகம் மட்டுமல்ல, சிறந்த புத்தகமும் கூட, அதைக் காண உயர்ந்த புத்தகம் உலகில் இதுவரையிலும் இல்லை, இனியும் இருக்க முடியாது.

இல்லாததொன்றில்லை குர்ஆனிலே என்பது போன்று ஏந்தல் நபியவர்கள் சொல்லாத தொன்றில்லை என்பதும்

உலகறிந்த உண்மை. நகம் வெட்டுவது முதல் நாட்டை ஆளுவது வரை எத்துறைக்கும் முத்திரையாய் வாழ்ந்து வழங்கிய வள்ளல் நபியின் வாழ்க்கை நூலில் கவிதைகளுக்கும் குறைவில்லை. கவிதையாக்கம் செய்ய வேண்டுமென முனைந்து கவிதை புனைந்து பேச வேண்டிய அவசியமில்லை. மாறாக கருணை நபியின் நாவிலிருந்து உதிரும் வார்த்தைகள் யாவுமே கற்கண்டு சொற்கொண்டு அமைந்திருக்க வேண்டும் என்பது இறை விதித்த நியதி.

ஏனைய நபிமார்களை விட ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை எல்லா வகையிலும் உயர்த்தியே வைத்துள்ளான் இறைவன். எனினும் எடுத்துக்காட்டாக ஆறு விஷயங்களை அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வரிசைபடுத்தினார்கள்.

அதில் முதலில் இடம் பெற்ற முத்துவாசகம் جَوَامِعُ الْكَلِمِ மொத்த வார்த்தைகளின் முழுச் சேகரமாக என்னிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதே.

ஹழ்ரத் அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்பட்டு புகாரி, முஸ்லிம் போன்ற புனித கிரந்தங்களில் பதிவு செய்யப்பட்ட இந்த எழில் மொழியின் வழியே ஏந்தல் நபியவர்களின் எழில்

நாமங்களில் ஜவாமிவுல் கலிம் என்பதும் ஒன்றேயாகும் என்பது நிரூபிக்கப்படுகிறது.

செம்மல் நபியின் சிந்தையில் உதித்து நாவில் நடந்து நானிலம் வந்த வார்த்தைகள் சிறியதானாலும் அது சீரிய கருத்துக்களைக் கருவுற்றிருக்கும் என்பதே எதார்த்தம். அங்ஙனமிருக்க அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கவிதைகளை புனைந்திருக்க வேண்டுமென்றோ, அல்லது அதற்காக முனைந்திருக்க வேண்டுமென்றோ ஆதாரத்தை தேடுவது சேதாரத்தில் தான் போய் முடியும்.

மாந்திரீகம், சூனியம் மிகுந்திருந்த காலத்தில் அந்த சமூகத்தினருக்கு நபியாக மூஸா அலைஹிஸ்லாம் அவர்களை அனுப்பிய இறைவன் அந்தக் கலைகளில் மிஞ்சவோ, விஞ்சவோ முடியாத வகையில் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு மாந்திரீக அற்புதத்தை முஃஜிஜத்தாக வழங்கி அவர்களுக்கு அருளப்பட்ட தவ்ராத் வேதம் நெடுகிலும் அக்கலையின் தத்துவங்களை அமைத்தான் இறைவன்.

அப்படியே தாவூது அலைஹிஸ்ஸலாம், ஈஸா அலைஹிஸ்ஸலாம் ஆகியோருக்கும் முறையே இசை, மருத்துவம் ஆகிய கலைகளின் அற்புதத்தை அளித்து, அதன் இரகசியங்களை தாங்கிய ஜபூர், இன்ஜீல்

வேதங்களையும் வழங்கி, அக்கால மக்களில் யாரும் இசை, அவை சார்ந்தவைகளில் தாவூது அலைஹிஸ் ஸலாம் அவர்களை விஞ்சிட முடியாமலும், மருத்துவம், இறந்தோரை உயிர்ப்பித்தல் போன்ற கலைகளில் ஈஸா அலைஹிஸ் ஸலாம் அவர்களை மிஞ்சிட முடியாமலும் அல்லாஹ் அமைத்தான்.

அந்தந்த கால மக்கள் எத்துறையில் எழுச்சியுற்றிருக் கிறார்களோ, அத்துறையில் செங்கோலோச்சும் வகையில் நபிமார்களை அனுப்பிய இறைவன், இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டிருந்த அரபியர்களிடையே இலக்கண, இலக்கியம் மட்டுமின்றி இன்ன பிற துறைகளிலும் மகத்தான பாதைகளை வகுத்து வழங்கும் மாபெரும் அறிஞராக, ஆய்வாளராக, ஆசிரியராக அள்ள அள்ளக் குறையா அறிவுச் சுரங்கமாக அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அனுப்பினான்.

ஆனால் நபியவர்களுக்கு கவிதை மட்டும் தெரியாது என்று ஒருவன் வாதித்தால் அவ்வாதம் அவன் அறிவின் பலஹீனத்தை அடையாளப் படுத்துவதோடு மட்டுமின்றி, அவன் ஈமானில் கூட அச்சப்பட வேண்டிய அபாயகரமான சூழலை ஏற்படுத்தும்.

காரணம், அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கவிதை தெரியாது என்றிருப்பின், கவிஞர்கள் வாழ்ந்த உலகில் கவிதை ஞானமே இல்லாத ஒருவரை நபியாக அல்லாஹ் தேர்ந்தெடுத்தான் என்று, அல்லாஹ்வின் அறிவையே ஆழம் பார்க்க முனைந்தாற்போலன்றோ ஆகிவிடும்.

எனவேதான், கருணை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், கவிதையில் ஈடுபாடு கொண்டவர் கள். கவிதை வாசித்தும் இருக்கிறார்கள். சில சமயம் சுவாசித்தும் இருக்கிறார்கள் என்பதை சான்றுகளோடு சமர்ப்பிக்கின்றோம்.

## கவிதைகளின் அவசியமும், அகமியமும்

வாகான மார்க்கமாம் இஸ்லாத்தின் வைகறைக் காலத்தில் வைரிகள் கவி பாடுவர். வள்ளல் நபி பற்றியும், வளமான இஸ்லாத்தைப் பற்றியும் இகழ்ந்து பாடும் கவிதைகள் ஈட்டியின் வேகத்தைவிட இதயத்தைத் தாக்கின.

இந்நிலையில் தான் ஹழ்ரத் ஹஸ்ஸான் இப்னு தாபித் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை எதிரிகளின் கவிதைகளுக்கு எதிர் கவிதை பாடுமாறு பாசநபியவர்கள் பணித்தார்கள். ஆசனம் அமைத்துக்

கொடுக்கப்பட்டது. அண்ணல் நபியின் அவைப்புலவர் என்று புனைப்பெயரும் சூட்டப்பட்டது. அத்துனைக்கும் மேலாக அல்லாஹ்வே இவருக்கு பரிசுத்த ஆவியான ஜிப்ரயீலைக் கொண்டு உதவுவாயாக ! என ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே ! கரம் ஏந்தி துஆவும் செய்தார்கள். அதை பின் வரும் பொன்மொழி நினைவு படுத்துகிறது.

عَنْ اَبِي سَلَمَةَ بْنِ عَبْدِ الرَّحْمٰنِ بْنِ عَوْفٍ اَنَّهُ سَمِعَ حَسَّانَ بْنَ ثَابِتِ الْاَنْصَارِيِّ يَسْتَشْهِدُ اَبَا هُرَيْرَةَ فَيَقُوْلُ يَا اَبَا هُرَيْرَةَ نَشَدْتُكَ بِاللّٰهِ هَلْ سَمِعْتَ رَسُوْلَ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُوْلُ يَا حَسَّانُ اَجِبْ عَنْ رَسُوْلِ اللّٰهِ اَللّٰهُمَّ اَيِّدْهُ بِرُوْحِ الْقُدُسِ؟ قَالَ اَبُوْ هُرَيْرَةَ نَعَمْ

அப்துர் ரஹ்மான் பின் அவ்ப் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் மகனார் அபூசலமா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்:

ஹஸ்ஸான் பின் தாபித் அல் அன்சாரி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடம், அபூஹுரைரா! அல்லாஹ்வை முன்னிறுத்தி உங்களிடம் கேட்கிறேன். அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹஸ்ஸானே! அல்லாஹ்வின் தூதர் சார்பாக

(எதிரிகளுக்கு கவிதைகள் மூலம்) பதிலடி கொடுப்பீராக. இறைவா ! தூய ஆன்மா ஜிப்ரயீல் மூலம் ஹஸ்ஸானை வலுப்படுத்துவாயாக என்று கூறியதை நீங்கள் செவியுற்றீர்கள் அல்லவா என்று விவரம் கேட்டார்கள். அதற்கு அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆம் என்று பதிலளித்தார்கள்.

(புகாரி 6152)

عَنِ الْبَرَاءِ رَضِيَ اللّٰهُ عَنْهُ اَنَّ النَّبِيَّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ لِحَسَّانَ اهْجُهُمْ اَوْ قَالَ هَاجِهِمْ وَجِبْرِيْلُ مَعَكَ

பராவு பின் ஆஸிப் ரழியல்லாஹு அன்ஹுமா அவர்கள் அறிவிக்கிறார்கள்:

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (பனூ குறைழா போரின் போது) ஹஸ்ஸான் ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் எதிரிகளுக்கு பதிலடியாக வசைக்கவிதை பாடுங்கள். (வானவர்) ஜிப்ரயீல் உங்களுடன் (துணையாக) இருப்பார் என்றார்கள்.

(புகாரி 6153)

لَيْلَةُ الْقَدْرِ خَيْرٌ مِّنْ اَلْفِ شَهْرٍ تَنَزَّلُ الْمَلٰٓئِكَةُ وَالرُّوْحُ فِيْهَا بِاِذْنِ رَبِّهِمْ مِّنْ كُلِّ اَمْرٍ سَلٰمٌ هِيَ حَتّٰى مَطْلَعِ الْفَجْرِ

லைலத்துல் கத்ரு எனும் மகத்தான இரவு ஆயிரம்

மாதங்களை விட சிறப்பானதாகும். அதில் வானவர்களும், பரிசுத்த ஆவியும் (ஜிப்ரயீலும்) தங்களின் இரட்சகனின் அனுமதியைக் கொண்டு ஒவ்வொரு காரியத்தைக் கொண்டு இறங்குகின்றனர். (அல்குர்ஆன்–96:3,4)

புண்ணியம் பூத்துக் குலுங்கும் இப்புனித இரவின் பெருமையை உரைக்கும் இறைவன், அவ்விரவில் தன் அடியார்களுக்கு தன் அருள் மாரியை பொழிகிறான். அது வானவர்களின் வருகை, இன்னும் பரிசுத்த ஆவியான ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் வருகை என அல்லாஹ் தன் அருள்மறையில் திருவுளமாகிறான்.

அவ்விரவில் வானவர்கள் பூமிக்கு வருவதையே மகிமைப் படுத்தி கூறும் இறைவன் அந்த வானவர்களில் ஒருவரான ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களைக் குறிப்பிட்டு கூறுவதன் மூலம் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பெருமையை இறைவன் பறைசாற்றுகிறான் நபிமார் களுக்கு வஹீ என்னும் இறைத்தூதை ஏந்தி வரும் ஜீப்ரீலின் மூலம் ஹஸ்ஸானுக்குஉதவி புரியுமாறு பெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் துஆ செய்ததிலிருந்து பூமான் நபியின் புகழைப் பாடும் புனிதர்களுக்கு லைலத்துல் கத்ரு இரவில் வணங்கிய வணக்கசாலிகளுக்கு பொழியும் அருளையே அல்லாஹ் பொழிகிறான் என்பதைத் தெளிவாக தெரியமுடிகிறது.

ஆருயிர் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஆசிகளையும், துஆக்களையும் யாசித்துப் பெற ஆசித்து நிற்பர் அருமந்த ஸஹாபிகள். ஆனால் அருமை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே முன் வந்து துஆச் செய்தார்கள் என்பதன் மூலம் கவிதைக்கு பச்சைக்கொடி காட்டியுள்ளார்கள் என்பது இங்கே நிரூபணம் ஆகிறதல்லவா?

மற்றொரு சந்தர்ப்பத்தில் முஷ்ரிகீன் குறைஷிகளையே வசைபாட வேண்டிய அவசியம் ஏற்பட்ட போது அண்ணலிடமே அனுமதி வேண்டுகிறார்கள் கவிஞர் ஹஸ்ஸான் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள். அதன் பின்னர் நடந்ததை அன்னையர் திலகம் ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவிக்கிறார்கள்:

عَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا قَالَتْ: اِسْتَأْذَنَ حَسَّانُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي هِجَاءِ الْمُشْرِكِيْنَ، قَالَ كَيْفَ بِنَسَبِيْ فَقَالَ حَسَّانُ لَأَسُلَّنَّكَ مِنْهُمْ كَمَا تُسَلُّ الشَّعْرَةُ مِنَ الْعَجِيْنِ

(முஸ்லிம்களுக்கெதிராக இறை நிராகரிப்பாளர்கள் வசைகவி பாடியபோது) இறை நிராகரிப்பாளர்களுக் கெதிராக வசைகவி பாடுவதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஹஸ்ஸான் இப்னு தாபித் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அனுமதி

கேட்டார்கள். (அதற்கு) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என் வம்சம் அவர்களுடன் கலந்திருக்க அவர்களை வசைபாடுவது எப்படி?என்று கேட்டார்கள்.

அதற்கு ஹஸ்ஸான் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் குழைத்த மாவிலிருந்து முடியை உருவி எடுப்பது போல் தங்களை அவர்களிலிருந்து உருவி எடுத்து விடுவேன் என்றார்கள். (புகாரி 3529)

கருணை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கவிதையை அங்கீகரித்தது மட்டுமின்றி சில சந்தர்ப்பங்களில் ரசித்தும், இன்னும் சில சந்தர்ப்பங்களில் அவர்களே கவிபாடியுமிருக்கிறார்கள் என்பதற்கான சான்றுகள் ஹதீஸ் ஏடுகளில் ஏராளமாகவும், தாராள மாகவும் காணமுடிகிறது.

عَنْ عَائِشَةَ اَنَّ اَبَا بَكْرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ دَخَلَ عَلَيْهَا وَعِنْدَهَا جَارِيَتَانِ فِيْ اَيَّامِ مِنًى تُدَفِّفَانِ وَتَضْرِبَانِ وَالنَّبِيُّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ مُتَغَشٍّ بِثَوْبِهِ فَانْتَهَرَهُمَا اَبُوْبَكْرٍ - فَكَشَفَ النَّبِيُّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنْ وَجْهِهِ فَقَالَ دَعْهُمَا يَا اَبَا بَكْرٍ فَاِنَّهَا اَيَّامُ عِيْدٍ - وَتِلْكَ الْاَيَّامُ اَيَّامُ مِنًى -

ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவிக்கிறார்கள்: மினாவில் தங்கும் நாட்களில் ஒருநாள்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் துணியால் முகத்தைப் போர்த்திக் கொண்டு படுத்திருந் தார்கள். அவ்வமயம் இரு சிறுமிகள் "தஃப்" எனும் கஞ்சிராவை தட்டிக் கொண்டிருந்தார்கள். அங்கே வந்த அபூபக்கர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அச்சிறுமி களை அதட்டினார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது முகத்திலிருந்து ஆடையை நீக்கிவிட்டு அபூபக்கரே ! அவ்விருவரையும் விட்டு விடுங் கள். ஏனெனில் இது பெருநாட்கள் என்று கூறினார்கள். அது மினாவில் தங்கும் நாட்களாகும். (புகாரி 3529)

பாடல் பாடுவது கூடாது என்றிருப்பின் தவறுகளைக் கண்ட இடத்திலேயே கண்டிப்பதில் கண்மணி ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விட கண்டிப்பான வர்கள் வேறெவரும் நிச்சயம் இல்லை.

எனவே பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பாடல்களைக் கேட்டுபுளகாங்கிதம் அடைந்திருக்கிறார்கள் என்பதையல்லவா மேற்கண்ட பொன்மொழி புலப்படுத்துகிறது.

அகழ் யுத்த களத்தில், முன்னேற்பாடாக குழி தோண்டப்பட்டுக் கொண்டிருந்தது. அடிமைகள் எவருமின்றி முஹாஜிர்களும், அன்சாரிகளும் பசியுடனும் படு கஷ்டத்துடனும் குழி தோண்டும் வேலையில்

ஈடுபட்டிருந்த போது ஒருநாள் அதிகாலைவேளை அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அங்கே சமூகமளித்தார்கள். அவ்வமயம்,

اَللّٰهُمَّ اِنَّ الْعَيْشَ عَيْشُ الْاٰخِرَةِ فَاغْفِرْ لِلْاَنْصَارِ وَالْمُهَاجِرَةِ

இறைவா ! நிச்சயமாக நிலையான வாழ்க்கை மறுமையின் வாழ்க்கையே. எனவே, அன்சாரிகளுக்கும், முஹாஜிர்களுக்கும் மன்னிப்பு வழங்குவாயாக ! என்று பாச நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (பாடிக்கொண்டே) கூறினார்கள்.

அதைச் செவியேற்ற செம்மலர்களாம் ஸஹாபிகள், பாசநபி அவர்களுக்கு பதிலளிக்கும் வண்ணம்

نَحْنُ الَّذِيْنَ بَايَعُوْا مُحَمَّدًا عَلَى الْجِهَادِ مَا بَقِيْنَا اَبَدًا

நாங்கள் வாழும் காலமெல்லாம் புனிதப்போரில் ஈடுபடுவோம் என்று முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் (பைஅத்) உறுதி பிரமாணம் வழங்கியுள்ளோம் என்று பாடினார்கள். (புகாரி 4099)

ஹழ்ரத் அனஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்பட்டு புனித புகாரி ஷரீஃபில் பதிவு செய்யப்பட்டுள்ள இந்த ஹதீஸின் மூலம் நபியவர்கள்

போர்ப் பணிகளில் ஈடுபட்டிருக்கும் ஸஹாபிகளின் உள்ளத்தில் உவகையை உண்டாக்க பாடலால் பிரார்த்தித்ததையும், அதைக் கேட்ட இனிய ஸஹாபிகள் இனம்புரியா மகிழ்ச்சியில் பதில் பாடல் பாடியதையும் புரிய முடிகிறது.

அருமை ஸஹாபிகள் பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பூ முகத்தை பார்த்தாலே புளகாங்கிதம் பெறுபவர். அப்படியிருக்க ஆருயிர் அண்ணலின் அதரம் அசைந்து பாடல் வருகிறபோது ஏற்படும் பரவசத்தை எழுத்தில் வடித்திடவா இயலும். மட்டற்ற மகிழ்ச்சியில் ஆனந்தங்கொண்டவர்களாகத்தான் அருமை ஸஹாபிகளும் பதில் பாடல் பாடினர்.

அதே அகழ் யுத்தத்தில், இன்னொரு காட்சியில் ஸஹாபிகள் பாடிய போது, அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பதில் பாடல் பாடினார்கள். இதயங்களை இனித்திடச் செய்யும் இந்த நிகழ்வு புனித புகாரி ஷரீபிலேயே ஹழ்ரத் அனஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ளது.

முஹாஜிர்களும், அன்சாரிகளும் மதீனாவைச்சுற்றி அகழ் தோண்டினர். அப்போது தம் முதுகின் மீது மண் சுமந்தவர்களாக பின்வருமாறு பாடினர்:

نَحْنُ الَّذِيْنَ بَايَعُوْا مُحَمَّدًا عَلَى الْإِسْلَامِ مَا بَقِيْنَا اَبَدًا

நாங்கள் வாழும் காலமெல்லாம் இஸ்லாத்திலேயே ஜீவித்திருப்போம் என முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் உறுதிமொழி (பைஅத்) வழங்கியுள்ளோம் என்று (பாடியபடியே) கூறிக்கொண்டிருந்தனர்.

அதனை அவதானித்த சாந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அந்த ஸஹாபிகளுக்கு பதிலளிக்கும் வண்ணம்,

اَللّٰهُمَّ اِنَّهُ لَا خَيْرَ اِلَّا خَيْرُ الْاٰخِرَةِ فَبَارِكْ فِى الْاَنْصَارِ وَالْمُهَاجِرَةِ

இறைவா, மறுமையின் நன்மையைத்தவிர வேறு நன்மை இல்லை. எனவே அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும் நீ அருள் வளம் புரிவாயாக என்று பாடலிலேயே கூறினார்கள். (புகாரி ஷரீப் 2835, 4100)

அதே அகழ் யுத்தத்தில் மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே ! மண்ணைச் சுமந்து சென்றார்கள். அவர்களின் அழகு வயிற்றின் அடர்ந்த முடிகளை மண்ணின் புழுதிகள் மறைத்திருந்தன. அந்நேரம் மண்ணைச் சுமந்தவாறு இப்னு ரவாஹா ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் யாப்பு வகை(ப்பாடல்) வரிகளை

பாடிக் கொண்டிருந்ததை நான் கேட்டேன் என பராவு பின் ஆஸிப் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.

அந்த பாடல்:

اَللّٰهُمَّ لَوْلَا اَنْتَ مَا اهْتَدَيْنَا ۔ وَلَا تَصَدَّقْنَا وَلَا صَلَّيْنَا
فَاَنْزِلَنْ سَكِيْنَةً عَلَيْنَا ۔ وَثَبِّتِ الْاَقْدَامَ اِنْ لَاقَيْنَا
اِنَّ الْاُلٰى قَدْ بَغَوْا عَلَيْنَا ۔ وَاِنْ اَرَادُوْا فِتْنَةً اَبَيْنَا

இறைவா, நீ இல்லாவிடின் நாங்கள் நேர்வழி பெற்றிருக்க மாட்டோம், தர்மம் செய்திருக்கவும் மாட்டோம் தொழுதிருக்கவும் மாட்டோம். நாங்கள் பகைவர்களை சந்திக்கும் போது, எங்கள் மீது அமைதியை இறக்கியருள்வாயாக. எங்கள் பாதங்களை உறுதிபடுத்துவாயாக. இவர்கள் எங்களைச் சோதனையில் ஆழ்த்த விரும்பினால் அதற்கு நாங்கள் இடம் தர மாட்டோம். என்று பாடினார்கள். அபைனா என்ற வார்த்தையை நீட்டியபடியே முழங்கினார்கள். (புகாரி 4106)

அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு பயணத்தில் தம் மனைவியருடன் சென்றார்கள். பாட்டுப்பாடி ஒட்டகத்தை வேகமாக ஓட்டும் அன்ஜஸா என்பவரிடம், அன்ஜஸா உம்மை எச்சரிக்கிறேன் நிதானமாக ஓட்டிச் செல் (ஒட்டக சிவிகைக்குள் இருக்கும்) கண்ணாடி சீசாக்களை (பெண்களை) உடைத்து விடாதே என்று கூறினார்கள்.

இதை அறிவிக்கும் அனஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அப்பயணத்தில் தம் தாயார் உம்மு சுலைம் ரழியல்லாஹு அன்ஹா அவர்களும் இருந்ததாக கூறுகிறார்கள். (புகாரி) 6149 பஃத்ஹுல்பாரி)

மேற்கண்ட ஹதீஸில் ஒட்டக ஓட்டியை நிதானமாக போகச்சொன்னார்களேயன்றி பாடுவதை தடுக்கவில்லை என்றும் எளிதில் புரிய முடிகிறது.

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் (ஒரு போரின் போது) நடந்து கொண்டிருக்கையில் அவர்களின் காலில் கல் பட்டு விட்டது. இதனால் அவர்களின் (கால்) விரலில் (காயமேற்பட்டு) இரத்தம் சொட்டியது. அப்போது அவர்கள்

هَلْ أَنْتِ إِلَّا إِصْبَعٌ دَمِيتِ ۞ وَفِي سَبِيلِ اللّٰهِ مَا لَقِيتِ

நீ இரத்தம் சொட்டுகிற ஒரு விரல்தானே.
நீ பட்டதெல்லாம் அல்லாஹ்வின் பாதையில்தானே.
என்று (ஈரடி சீர்ப்பாடல் போன்ற வடிவில் பாடினார்கள்.
(புகாரி ஷரீப் 6146, 2802)

ஹுனைன் யுத்தகளத்தில் அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களது “பைழா” என்னும் வெண்ணிற கோவேறு கழுதையின் மீது அமர்ந்திருந் தார்கள். அபூசுப்யான் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள்

அதன் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். அந்நேரம் மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்

أَنَا النَّبِيُّ لَا كَذِبْ ۞ أَنَا ابْنُ عَبْدِ الْمُطَّلِبْ

நான் (நபி) இறைத் தூதராவேன். இது பொய்யல்ல. நான் அப்துல் முத்தலிபின் மகனாவேன் என்று பாடிய படியே கூறினார்கள். (புகாரி ஷரீப் 2864, 2874, 2930)

ஜாபிரிப்னு சம்ரா ரழியல்லாஹு அன்ஹு கூறுகிறார் கள். நான் நூற்றுக்கும் மேற்பட்ட இடங்களில் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் அமர்ந்திருக்கிறேன். அவர்களின் தோழர்கள் பாடல் பாடுகிறவர்களாக இருந்தார்கள். அறியாமைக் காலத்து செய்திகளையும் அவர்கள் பேசுவார்கள். நபியவர்கள் மௌனமாக இருப்பார்கள். சிலசமயம் அவர்களுடன் சேர்ந்து புன்முறுவலாகச் சிரிப்பார்கள். (திர்மிதீ ஷரீப் 112)

இது போன்ற ஹதீஸ்களின் வழியே கருணை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கவிதைகளையும், கவிப்பாடல்களையும் அங்கீகரித்திருப் பதை அறிய முடிகிறது.

மேலும், கவிபுனையும் புலவர்களை பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கௌரவித்த நிகழ்வு நம் நெஞ்சத்தில் நிழலாடுகிறது.

கஅபு இப்னு ஜுஹைர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பூமான் நபியை புகழ்ந்து கவி பாடிய போது, கருணை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தம் புனித மேனியை தழுவி நின்ற போர்வையை போர்த்தி கௌரவித்தார்கள் என்ற செய்தி முஸ்தத்ரக் எனும் ஹதீஸ் கிரந்தத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

புனித மார்க்கம் இஸ்லாத்திற்காக அரும் பெரும் தியாகங்களைச் செய்து செங்குருதி சிந்தி, போர்க்களம் கண்டு, உயிரிழந்து, உறவிழந்து, மனையிழந்து, மனையோரிழந்து, மாதா பிதாவிழந்து, மனைவி மக்களிழந்து, பொருளிழந்து, பொன்னிழந்து, வார்த்தைகளால் வடிக்க முடியாத வகையில் தியாகத்தின் தீபங்களாய் மிளிர்ந்த ஸஹாபிகள், இன்றும் நம் இதயத்தடாகத்தில் நீந்தி வரும் நல்லோர்கள், அன்னவர்களின் தியாகத்திற்கு அல்லாஹ் எவ்வளவோ வெகுமதிகளை வழங்கியுள்ளான். அத்தனை பெரும் சிறப்புகளுக்குச் சொந்தமான ஸஹாபிகளில் யாருக்கும் வழங்காத பேற்றை தாஹா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன்னைப் புகழ்ந்த ஸஹாபிக்கு போர்வை போர்த்தியதன் மூலம் வழங்கினார்களெனில், பூமானை புகழுவதில் புறமுதுகு காட்டுவது அறிவீன மன்றோ? அன்பர்களே ! அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மண்ணக வாழ்விலிருந்து

மறைந்த போது, அவர்களிடம் ஒரு போர்வை இருந்தது. அது அடியார்களான நம்மை அரவணைக்கத்தான். அல்லாஹ் அந்த நற்பாக்கியம் பெற்ற நல்லோர்களில் நம்மை ஆக்குவானாக. ஆமீன்.

## கவிஞர் ஸஹாபிகளின் கவிதைகள்

பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அகவாழ்வைத் துவங்கியபோது, பிரிவாற்றாமை யால் நான்கு கலீபாக்களும், பாவையர் திலகம் ஃபாத்திமா நாயகியும் மாநபியின் மாமி ஸஃபிய்யா நாயகியும், அபூ சுப்யான் (ரலியல்லாஹு அன்ஹும்) போன்றோர்கள் பாடிய கவிதைகள் இன்றும் இலக்கியங் களில் நின்று நிலைத்திருக்கின்றன.

தூய இஸ்லாத்திற்காக தூக்கிலிடப்பட்ட முதல் மனிதர் குபைப்பின் அதீ ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் மூச்சுக்கு முற்றுப் புள்ளி வைக்கும் கடைசி நேரத்தில் பாடிய கவிதை புனித புகாரி ஷரீஃபிலேயே காணக்கிடைக்கிறது.

مَا أُبَالِي حِيْنَ أُقْتَلُ مُسْلِمًا ۞ عَلَى أَيِّ شِقٍّ كَانَ لِلّٰهِ مَصْرَعِي
وَذَالِكَ فِي ذَاتِ الْإِلٰهِ وَإِنْ يَشَأْ ۞ يُبَارِكْ عَلَى أَوْصَالِ شِلْوٍ مُمَزَّعِ

நான் முஸ்லிமாகவே கொல்லப்படும் போது எதைப் பற்றியும் நான் பொருட்படுத்த மாட்டேன். எந்த இடத்தில் நான் இறந்தாலும் இறைவனுக்காகவே கொல்லப் படுகிறேன் (என்பதில் எனக்கு மகிழ்ச்சியே) நான்

உயிரிழப்பது இறைத் திருப்திக்காகத் தான் எனும் போது அவன் நாடினால் துண்டிக்கப்பட்ட எனது உறுப்புக்களின் இணைப்புகளின் மீது அருள்வளம் பொழிவான் என்று பாடினார்கள். (புகாரி ஷரீப் 4086)

அருமைக் கவிஞர் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பூமான் நபி பற்றி புகழ்ந்து பாடியதை ஹழ்ரத் அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள்:

وَفِينَا رَسُولُ اللهِ يَتْلُو كِتَابَهُ
إِذَا انْشَقَّ مَعْرُوفٌ مِنَ الْفَجْرِ سَاطِعُ
أَرَانَا الْهُدَى بَعْدَ الْعَمَى فَقُلُوبُنَا
بِهِ مُوقِنَاتٌ أَنَّ مَا قَالَ وَاقِعُ
يَبِيتُ يُجَافِي جَنْبَهُ عَنْ فِرَاشِهِ
إِذَا اسْتَثْقَلَتْ بِالْمُشْرِكِينَ الْمَضَاجِعُ

எங்களிடையே அல்லாஹ்வின் தூதர் இருக்கிறார்கள் வைகறைப் பொழுது புலரும் நேரத்தில் அவர்கள் இறை வேதத்தை ஓதுகிறார்கள்.

குருட்டுத்தன்மையில் இருந்த எங்களுக்கு நேர்வழி காட்டினார்கள். அவர்கள் கூறியது நிச்சயம் நிகழும் என எங்கள் உள்ளங்கள் உறுதியாக நம்புகின்றன.

இரவில் இணை வைப்பாளர்கள் படுக்கையில் ஆழ்ந்துக் கிடக்கும் போது, நபியவர்கள் படுக்கையிலிருந்து எழுந்து தொழுவார்கள். (புகாரி 1155, 6151)

கைபர் யுத்தத்திற்கு சென்று கொண்டிருக்கையில் மக்களில் சிலர் ஆமிர் பின் அக்வஃ ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் கவிதைகளில் சிலதைப் பாட மாட்டீர்களா? என்று கேட்டார்கள். ஆமிர் பின் அக்வஃ ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் வாகனத்திலிருந்து கீழிறங்கி பின்வரும் பாடலை பாடினார்கள்:

اَللّٰهُمَّ لَوْلَا اَنْتَ مَا اهْتَدَيْنَا ۞ وَلَا تَصَدَّقْنَا وَلَا صَلَّيْنَا
فَاغْفِرْ فِدَاءً لَّكَ مَا اقْتَفَيْنَا ۞ وَثَبِّتِ الْاَقْدَامَ اِنْ لَاقَيْنَا
وَاَلْقِيَنْ سَكِيْنَةً عَلَيْنَا ۞ اِنَّا اِذَا صِيْحَ بِنَا اَتَيْنَا

இறைவா, நீ இல்லையெனில் நாங்கள் நேர்வழி பெற்றிருக்க மாட்டோம். தர்மம் செய்திருக்க மாட்டோம். தொழுதிருக்கவும் மாட்டோம். உனக்காக (எங்களை) அர்ப்பணம் செய்கிறோம். உன் வழியை பின்பற்றும் வரை எங்களை மன்னிப்பாயாக. நாங்கள் (போர்க்களத்தில் எதிரிகளை) சந்திக்கும் போது, எங்கள் பாதங்களை உறுதிபடுத்துவாயாக. எங்கள் மீது அமைதியைப் பொழிவாயாக. (அறவழியில் செல்ல) நாங்கள் அழைக்கப்பட்டால் (தயாராக) வந்து விடுவோம்.

எங்களிடம் மக்கள் அபயக்குரல் எழுப்பினால் (உதவிக்கு வருவோம்) என்று பாடிக் கொண்டிருந்தார்கள். வழமை போல் பாடலைக் கேட்ட ஒட்டகங்கள் விரைந்தோடின.

அப்போது அல்லாஹ்வின் தூதர் அவர்கள் யார் இந்த ஒட்டக ஓட்டி என்றார்கள். ஸஹாபிகள், ஆமிர் பின் அக்வஃ என்று பதிலளித்தனர். அப்போது அல்லாஹ் அவருக்கு அருள் புரிவானாக என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள் (புகாரி 6148).

ஹஜ்ரத் அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள் ; நான் இஸ்லாத்தை ஏற்பதற்காக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்த போது வழியில்

يَا لَيْلَةً مِنْ طُولِهَا وَعَنَائِهَا
عَلَى أَنَّهَا مِنْ دَارَةِ الْكُفْرِ نَجَّتِ

எவ்வளவு நீண்ட களைப்பூட்டுகிற இரவு, ஆயினும் அது இறை நிராகரிப்பு அரசாளும் நாட்டிலிருந்து என்னை விடுதலை செய்துவிட்டது. என்று பாடினேன் என்கிறார்கள். (புகாரி ஷரீப் 4393)

# விமர்சனங்களும் - விளக்கங்களும்

மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புகழ் ஓதும் மௌலிது ஷரீபை மறுக்கும் கூட்டத்தினர் மௌலிதை மறுப்பதற்கு குர்ஆன், ஹதீஸ் ரீதியிலான ஆதாரங்களைக் கூறாமல், தமது யூகங்களையும், கற்பனைகளையுமே கூறிவருகின்றனர்.

மௌலிதையே மறுக்கும் இவர்கள் மௌலிதில் இடம்பெற்ற சில வாசகங்களையே குறைகூறித் திரிகின்றனர். மௌலிது முழுவதிலும் தவறு இருப்பதாக அவர்கள் வாதிக்கவில்லை அவர்களால் வாதிக்க ஆசையிருந்தும் முடியவில்லை.

மௌலிது ஓதத்தெரியாத சில அப்பாவி இளைஞர்கள், தங்களுக்குக் கிடைத்த வரப்பிரசாதமாக, இந்த வாதத்தை பயன்படுத்துகின்றனர். ஓதத்தெரியவில்லை என்று ஒப்புக் கொள்வதைவிட ஓதக்கூடாது என்று கூறினால் அதைப் பெருமையாக கருதுகின்றனர். ஆனால் மவ்லித் ஓதத் தெரியவில்லையென ஒதுங்கத் தேவையில்லை. மாறாக மவ்லித் மஜ்லிஸிலேயே அமர்ந்து அக, மகிழ்வாய் அவதானிப்பதும், சிந்தை குளிர செவிசாய்ப்பதுமே ஓதியதன் நன்மையைத் தரும் என்ற உண்மையை வாலிப இதயங்களின் கவனத்திற்கு

தருகிறோம். அவர்களால் குறை கூறப்படும் வாசகங்களை நாம் ஆய்வு செய்தால் அவைகள் குர்ஆன், ஹதீஸிற்கு உட்பட்டு நிறைவுடையதாகவே இருப்பதை நிதர்சனமாக காண முடிகிறது. அவைகளை நிரூபிக்கும் முகமாக, அவர்களின் விபரமற்ற வினாக்களுக்கு சில விளக்கங் களை முன் வைக்கிறோம்.

**? குற்றச்சாட்டு**

கவிதைகளையே மறுக்கும் இக்குழுவினர் தங்கள் வாதத்திற்கு வலுவூட்டுவதற்காக ஒரு திருமறை வசனத்தை முன் வைக்கின்றனர்.

وَالشُّعَرَآءُ يَتَّبِعُهُمُ الْغَاوُنَ

கவிஞர்களை வழிகேடர்களே பின் தொடர்வர்

இந்த திருவசனத்தை முன் வைத்து, கவிதைகளும் மௌலிதுகளும் கூடாது என்று வாதிடுகின்றனர்.

**விளக்கம்**

அரைகுறையாகப் புரிவதும், அதையே திரித்துப் பேசுவதும் முன் உள்ளதைச் சொல்லி பின் உள்ளதை மறைப்பதும் பின் உள்ளத்தைச் சொல்லி முன் உள்ளதை மறைப்பது மான வேலைகளில் கைதேர்ந்தவர்களின் வழமை யான வஞ்சனைகளில் ஒன்றுதான் இதுவும்.

மேற்கண்ட வசனத்தையே ஒன்றுக்கு பலமுறை கூறும் இவர்கள் ஒரு முறையாவது அந்த வசனத்தின் தொடர்வசனங்களை கூறுகிறார்களா? என்றால் இல்லை என்பதே அதன் விடை.

காரணம் தொடர் வசனத்தை ஓதினால் திருடனுக்கு தேள் கொட்டிய கதையாகி விடும், வேலிக்கு வைத்த முள் காலை பதம்பார்த்த கதையாகிப் போகும்.

இந்த வசனத்தின் தொடர் வசனங்களையும் அவைகள் அருளப்பட்ட காரணங்களையும் மறைக்க முனைகிறார்கள். ஆனால் நாம் அதை முன் வைக்கிறோம்.

وَالشُّعَرَآءُ يَتَّبِعُهُمُ الْغَاوٗنَ ؕ

எனும் இவ்வசனம் இறை நிராகரிப்பாளர்களான குறைஷிக் காபிர் கவிஞர்களைக் குறித்தே அறிவிக்கப் பட்டது.

காரணம் அவர்கள் தம் கவிப்புலமையால் மாநபியை இகழ்ந்து பாடிக் கொண்டிருந்தார்கள்.

குறிப்பாக அப்துல்லாஹ் இபுனு ஜப்அரீ, ஜுபைல் இபுனு வஹ்ப், உமையதுப்னு அபீஸல்த் போன்ற இறைநிரா கரிப்புக் கவிஞர்கள் புனித கஅபாவின் வளாகத்தில் அமர்ந்து சூழஇருக்கும் தம் நேசர்களின் நெஞ்சங்களை நெகிழச் செய்வதற்காக கதைகளாலும், கற்பனை களாலும், புனைந்து பொய்யும் பொறாமையும் பொதிந்து கவி பாடுவார்கள்.

அதை அவதானிக்கும் கூட்டத்தினர் சிரித்து கை கொட்டி குதித்து குதூகலப்படுவார்கள்.

அந்த வார்த்தைகளிடையே அவர்கள், நாங்கள் கூறுவதெல்லாம் முஹம்மது கூறுவதுபோலேயன்றி வேறில்லை என்ற வாசகமும் இடம் பெறும்.

இந்த வார்த்தைகள் நம் நெஞ்சத்தின் நேசர் மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வருத்தத்தை உண்டாக்கியது.

எனவேதான் அல்லாஹ் இவ்வசனத்தை அருளி அந்தக் கவிஞர்களை வழிகெட்டவர்களே ! பின் தொடர்வார்கள் என்றான்.

இவ்வசனம் காபிர்களான கவிஞர்களைக் குறித்து அருளப்பட்டதே என ஹழ்ரத் அப்துல்லாஹ் இபுனு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள்.

இது போன்று யஹூதிகளையும், நஸாராக்களையும் குறித்து இறக்கப்பட்ட எழில் மறை வசனங்களை தன் வக்கிர புத்தியால் நேர்முரணான பொருள் கொடுத்து, இனிய இஸ்லாத்தின் எழுச்சிக்குக் காரணமான இறை நேசர்களுக்கே பயன்படுத்தி பேசியும் ஏசியும் வருகின்றனர்.

இவர்களின் பக்குவமற்ற பழுதுபட்ட சிந்தனை வலிமார்கள் என்ற வட்டத்தையும் தாண்டி தீர்க்க தரிசிகளான நபிமார்களையே தன் அகோர புத்தியால் வக்கனை பேசி வருகிறது.

நபி யூசுப் அலைஹிஸ்ஸலாம் அவர்களையும், ஜுலைஹா அம்மையாரையும் ஒழுக்கம் கெட்ட வார்த்தைகளால் பேசியும் எழுதியும் வரும் இது போன்றவர்களிடம் எப்படி உண்மையையும், உயர்ந்த நற்பண்புகளையும், எதிர் பார்க்க முடியும்? அவர்கள் கருத்துச் சொல்வதை நாம் தடுக்கவில்லை. அது கூட நாகரீக நடையில் இருக்க வேண்டும் என்றுதான் எதிர்பார்க்கிறோம்.

? குற்றச்சாட்டு

மௌலிது என்பது ஸஹாபிகளின் காலத்திலிருக்க வில்லை, பிந்திய கால முல்லா (உலமா)க்கள் தான் மௌலிதைக் கோர்வை செய்தனர் என்பது அவர்களது (பிடி) வாதம்.

உ. விளக்கம்

மாநபியின் புகழ் ஓதும் மகத்தான நடைமுறை பூமான் நபியவர்கள் பூவுலகில் தோன்றும் முன்னரே அல்லாஹ் வாலும், அமரர்களாலும் அருமை நபிமார்களாலும், முந்திய

வேதங்களாலும், ஆகமங் களாலும் நடைமுறைப்படுத்தப் பட்டே வந்திருக்கிறது.

பூவுலகின் புதுமலராய் பூமான் நபியவர்கள் பூத்தெழுந்த பின்னர் குறைஷிகளால் அல்அமீன், அஸ்ஸாதிக் என்று புகழாரம் சூட்டப்பட்டார்கள்.

நபியாகவே இந்த நானிலத்தில் அவதரித்த நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், தன்னை நபி என்று அறிமுகப்படுத்த எடுத்துக் கொண்ட அவகாசம் 40 ஆண்டுகள் அதன்பின் வஹியைப் பெற்று வீடுவந்த போது அண்ணலின் புகழை ஆரம்பத்தில் ஓதிய பெருமை, வனிதையர் திலகம் கதீஜா ரழியல்லாஹு அன்ஹா அவர்களைச் சாரும்.

பின்னர் இனிய இஸ்லாத்தின் புதுமுகத் தத்துவங்களைப் புரிந்து அதில் தன்னை ஆட்படுத்திக் கொண்ட அருமை ஸஹாபிகள் தங்கள் தகுதிகளுக்கேற்ப தாஹா நபியவர்களைப் புகழ்ந்து கூறியது ஹதீஸ்களில் காட்சி தருகின்றன.

அதற்கடுத்த காலங்களில் வாழ்ந்த மேன்மக்களும் வளர்முகச் சிந்தனை கொண்ட வலிமார்களும் வாழும் தம் பகுதிகளில் வள்ளலின் வாழ்வையும் வாக்கையும் வருணித்துப் பாடியுள்ளனர். உண்மை இவ்வாறிருக்க

மௌலிது என்பது சமீபகாலத்தில் தோன்றியதே என்று முன் வைக்கப்படும் வாதம் எப்படி வலுவானதாகும்.

வாதத்திற்காகக் கூட அதை அங்கீகரிக்க முடியாது என்பதற்கு பின்வரும் பொன் மொழியே சான்றாக அமைகிறது.

مَنْ سَنَّ فِي الْإِسْلَامِ سُنَّةً حَسَنَةً فَلَهُ أَجْرُهَا وَأَجْرُ مَنْ عَمِلَ بِهَا بَعْدَهُ مِنْ غَيْرِ أَنْ يَنْقُصَ مِنْ أُجُورِهِمْ شَيْئٌ

யார் இஸ்லாத்தில் புதிய நற்கருமத்தை தோற்றுவிக்கிறாரோ அவருக்கு அதன் நற்கூலியும், அவருக்குப் பின் அந்தை செயல்படுத்துவோரின் நன்மைகளும் அவர்களின் கூலிகுறைக்கப்படாமல் வழங்கப்படும் (முஸ்லிம்ஷரீப்) (ரியாழுஸ் ஸாலிஹின் 171)

மேற்கண்ட ஹதீஸின் மூலம் இஸ்லாத்தில் தோற்றுவிக்கப்பட்ட மௌலிது போன்ற நற்கருமங்கள் நன்மைகளை தருவனவேயன்றி அவைகள் தடுக்கப்பட வேண்டியதல்ல என்பதை நடுநிலை சிந்தனையுடன் ஆய்வு செய்யவேண்டும்.

உலகியல் ரீதியான தம் தேவைகளை மத்திய, மாநில அரசுகளிடம் கோரிக்கை வைப்பதற்காகக் கூட்டப்படும் மாநாடுகள், மாபெரும் பொதுக்கூட்டங்கள், ஊர்வலங்கள், பேரணிகள், ஆர்ப்பாட்டம், போராட்டம் இவைகளெல்லாம்

மாநபியின் காலத்தில் கிடையாது, ஆனால் மவ்லிதை மறுப்போர் அதை நடைமுறைபடுத்துவதேன்?

கோரிக்கைகளை அல்லாஹ்விடத்திலல்லவா முன் வைக்க வேண்டும். அடியார்களிடம் முன் வைப்பது அவர்களின் வாதப்படி தவறானதன்றோ?

அரபிக்கலா சாலைகள், மாத, வார இதழ்கள், மாநபியின் காலத்தில் இல்லாதது தானே. இன்று அவைகள் அமுலில் இருப்பது ஏன்?

ஆடியோ வீடியோ மற்றும் ஊடகங்களும் மாநபியின் காலத்தில் இருந்ததோ? அதை மட்டும் பயன்படுத்துவது ஏன்?

### ? குற்றச்சாட்டு

சுபுஹான மௌலிதை கோர்வை செய்தது யார் என்றே தெரியவில்லை. முகவரி இல்லாத மௌலிதை ஓதுவதால் என்ன பயன்?

### ✍ விளக்கம்

சுபுஹான மௌலிது ஷரீபை கோர்வை செய்ததாக இமாம் கஜ்ஜாலி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் இமாம் கதீப் முஹம்மது மதனி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் இவ்விருவரின் பெயர் முன் வைக்கப்பட்டாலும் இமாம் கஜ்ஜாலி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களால்

கோர்வை செய்யப்பட்டது என்பதே ஞானநாதர்களால் அங்கீகரிக்கப்பட்ட தகவல் ஆகும்.

சின்னக் குழந்தைகளின் பிஞ்சு நெஞ்சங்களில் கூட இடம் பிடித்திருக்கும் இந்த மௌலிதை கோர்வை செய்த மஹ்றான் தன் பெயர் வெளிவரவேண்டாம் என்று கருதியது தற்புகழ்ச்சி வேண்டாமே என்ற உயர்ந்த உணர்வாலன்றோ?

اَلَّذِيْنَ يُنْفِقُوْنَ اَمْوَالَهُمْ بِالَّيْلِ وَالنَّهَارِ سِرًّا وَّعَلَانِيَةً فَلَهُمْ اَجْرُهُمْ عِنْدَ رَبِّهِمْ

எவர்கள் தங்களது பொருள்களை இரவிலும், பகலிலும் இரகசியமாகவும், பகிரங்கமாகவும் தர்மம் செய்கிறார்களோ அவர்களுக்கு அவர்களின் இரட்சகனிடமிருந்து அவர்களின் கூலி இருக்கிறது (அல்பகரா 274)

மேற்கண்ட வசனத்தில் தர்மம் எனும் நன்மையான காரியத்தை மறைவாகவோ, பகிரங்கமாகவோ, இரவிலோ, பகலிலோ எப்படியும் செய்யலாம் என இயம்பும் இறைவன், அந்த வாசகத்தில் இரவையும், இரகசியத்தையும் முற்படுத்தியதன் மூலம் அதுவே சிறந்தது என்பதை புரிய முடிகிறது.

எனவேதான் மௌலிதை கோர்வை செய்த மஹ்றான்

தன் பெயரை இரகசியமாக்கி விட்டார்கள். இதுவும் தவறா?

கோர்வை செய்தவரின் பெயர் தெரியவில்லை என்பதாலேயே மௌலிது ஓதக்கூடாது என்றால், ஆசிரியர் பெயர் தெரியா எத்தனையோ நூல்கள், அரபிக்கல்லூரிகளில் பயிற்றுவிக்கப்படுகிறதே அதுவும் தவறோ?

கோர்வை செய்தவர் யார் என்று தெரியவில்லை என்பதுதான் மௌலிது ஓதுவதை மறுப்பதற்கு காரணமெனில், பெயர் தெரிந்த பெருமக்களால் தொகுக்கப்பட்ட மௌலிதுகளை ஓதலாம் தானே?

**? குற்றச்சாட்டு**

சுபுஹான மௌலிது தோன்றி சில நூறு ஆண்டுகள் தானே ஆகிறது, அதுவும் கேரளாவிலும், தமிழகத்திலும் மட்டும்தானே ஓதப்பட்டு வருகிறது, பிற மாநிலங்களில் இல்லையே. அரபு நாட்டில் கூட இல்லையே?

**விளக்கம்**

மௌலிது ஷரீப் என்பது பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிறப்பிற்கு முன்னரே இருந்து வருகிறது. சுபுஹான மௌலிது ஷரீப் தோன்றித்தான் சிலநூறு வருடங்கள் ஆகிறது. கடந்த

சில நூற்றாண்டுகளாக ஓதப்பட்டு வரும் மௌலிது ஷரீபை அந்த நூற்றாண்டுகளில் வாழ்ந்த முன்னோர்களுக்கு தெரியாத தவறா (?) பின்னால் வந்த வஹ்ஹாபிகளுக்கு தெரிந்துவிட்டது?.

ஒவ்வொரு பகுதிகளிலும் ஒவ்வொரு விதமாக புகழ்பாக்கள் வெவ்வேறு வித மொழிகளில் பாடப்பட்டே வருகிறதுஅவ்வாறே தமிழகத்திலும், கேரளாவிலும் சுபுஹான மௌலிது ஷரீப் சுகந்தமாக ஓதப்பட்டு வருகிறது.

அரபு நாட்டைப் பின்பற்றுவதற்கு அரபு நாடு எங்களுக்கு இமாமல்ல. அரபு நாட்டில் பிறந்த அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே எங்கள் வழிகாட்டி.

தாமரைத் தடாகத்தில் தேனீக்கள் வந்து தேனை உறிஞ்சி உண்டு, கொண்டு செல்கிறது. ஆனால் அதே தடாகத்தில் வாழும் தவளைகளுக்கு தாமரைத் தேனின் சுவையை சுவைக்கத் தெரியவில்லை.

அது போலவே அரபு நாட்டிலே பிறந்த அருமைநாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அகிலமெங்கும் வாழும் தீனோர்கள் தம் இதய தடாகத்தில் ஏந்தி போற்றிப் புகழ்கின்றனர். ஆனால் அந்த திருமேனியின் புனிதத்தை புரிந்து கொள்ளத் தெரியாத

அபாக்கியவான்களான அரபு நாட்டவர்களை பின்பற்றுவதற்கு அவர்கள் என்ன குர்ஆனா, ஹதீஸா? வஹ்ஹாபிய அரசு அமைந்த பின்னர்தான் பூமான் நபியின் மௌலிது ஓதப்படுவது தடுக்கப்பட்டதேயன்றி அதற்கு முன்னர்ஓதப்பட்டே வந்தது. இன்றும் கூட அரபுநாட்டில் தனிப்பட்ட முறையில் சில, பல வீடுகளில் ஓதப்பட்டு வருகிறதென்பதை அவர்களால் கூட மறுக்க முடியாது.

**? குற்றச்சாட்டு**

அரபியில் அமைந்திருக்கும் காவியங்களை அப்படியே ஓதுகின்றனர். பொருள் தெரியாமல் பாடும் மௌலிதால் பயன்இல்லையே.

**விளக்கம்**

அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை எந்த மொழியால் புகழ்ந்தால் என்ன?

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள் என்பதால்தான் அல்லாஹ்வை நாயனாக ஏற்றுக் கொண்டோம்.

நம் பெற்றோர் மற்றும் ஆசிரியர்கள் சொன்

தான் அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி மையை? அவர்களை நபியாக நம்பினோம். ர்கள் பாருங்

தாய் சொன்னதால் தான் இவர் தந்தை என்று ஏற்றுக் கொண்டோம். இவைகளில் எதற்குமே ஆதாரம் இல்லை. வாழ்க்கையே நம்பிக்கையில் தானே அமைந்திருக்கிறது. அப்படித்தான் அரபு மொழியில் மௌலிதை ஓதினாலும் சரி அழகு தமிழில் ஓதினாலும் சரி எந்த மொழியில் ஓதினாலும் சரி பூமானைப் புகழ்கிறோம் என்ற உணர்வோடு வீற்றிருக்கிற ஒவ்வொரு வினாடியும் பயன்மிக்கதேயன்றி வினாக்களுக்குட்படுத்தப் பட்டு விவாதம் செய்யப்பட வேண்டியதில்லை.

அரபியிலே இருக்கிறது பொருள் தெரியாமல் ஓதுகின்றனர் என்ற வாதம் சில வருடங்களுக்கு முன்பு வரை கூறிவந்தனர். ஆனால் மர்ஹூம், மௌலானா, அல்ஹாஜ் N.S.N. முஹம்மது அப்துல் காதிர் பாகவி அவர்களால் சுந்தர நபிகளாரின் சந்தனப் புகழ்பாடும் சுபுஹான மவ்லித் என்ற பெயரிலும்,

மௌலவி, அல்ஹாஜ், ஆலிம் கவிஞர் தேங்கை ஷர்புத்தீன் மிஸ்பாஹி அவர்களால் சுந்தரத் தமிழில் சுபுஹான மௌலிது என்ற மகுடத்திலும் மொழி பெயர்க்கப்பட்டு தமிழ் கூறும் மக்கள் மன்றில் பரவலாக அறிமுகப்பட்டிருக்கிறது.

இதன் மூலம் பொருள் தெரியாமல் ஓதுகின்றனர் என்ற வாதம் பேதமடைகிறது. பொருள் தெரியாமல் ஓதினாலும்

கூட அதுவும் நற்கூலிகளை நல்கும் என்பது சிலருக்கு கசந்தாலும் உண்மையேயாகும்.

தொழுகையில் ஃதனா, வஜ்ஜஹ்து, குனூத், அத்தஹிய்யாத் ஓதுகிறோம் அதன் பொருள் எத்தனைப் பேருக்கு தெரியும்? பொருள் தெரியவில்லை என்பதாலேயே தொழுகை மறுக்கப்பட்டு விடுமா?

பொருள் தெரிந்து ஓதித் தொழுத தொழுகைகள் மட்டும் அங்கீகரிக்கப்பட்டு விடுமா?

இவைகளையெல்லாம் புரியாமலும், புரியத்தெரியாமலும் எடுத்து வைக்கப்படும் வாதங்கள் எந்த வகையிலும் ஏற்க முடியாத சேதங்களேயாகும்.

? குற்றச்சாட்டு

மௌலிதின் ஆரம்பத்தில் அஸ்ஸலாமு அலைக்க அஸ்ஸலாமு அலைக்க என்று பல முறை பாடப்படுகிறது. ஒரே நபரையே அழைத்து திரும்பத் திரும்ப ஸலாம் சொன்னால் கேட்பவருக்கு அது கோபத்தையல்லவா மூட்டும்?

✍ விளக்கம்

பார்த்தீர்களா ! இவர்களின் அறியாமையை? கோபத்தை யாருடன் பொருத்திப் பார்க்கிறார்கள் பாருங்

கள். ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் சுபுஹானல்லாஹ் 33 முறை அல்ஹம்துலில்லாஹ் 33 முறை அல்லாஹு அக்பர் 34 முறை ஓதுமாறு மாநபியவர்கள் ஏவினார்கள். அருமை மகள் பாத்திமா நாயகி அவர்களுக்கும், தம் வறிய நிலையை முறையிட்ட ஸஹாபிகளுக்கும் சில பல சந்தர்பங்களில் கருணை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இதையே கற்பித்ததை புகாரி, முஸ்லிம் ஆகிய கிரந்தங்கள் சுமந்திருக்கிறது.

ஒருவனான அல்லாஹ்வை சுபுஹானல்லாஹ் அல்ஹம்துலில்லாஹ் என்று 33 முறை ஏன் கூற வேண்டும்? அல்லாஹு அக்பர் என்று 34 முறை ஏன் கூற வேண்டும்? இறைவனைப் புகழ எண்ணிக்கை எத்தனை யாய் இருந்தாலும் எப்படி தவறாகாதோ அப்படியே அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது எத்துணை முறை ஸலாம் சொன்னாலும் தவறாகாது.

إِنَّ اللَّهَ وَمَلَائِكَتَهُ يُصَلُّونَ عَلَى النَّبِيِّ يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا صَلُّوا عَلَيْهِ وَسَلِّمُوا تَسْلِيمًا

நிச்சயமாக அல்லாஹ்வும், அவனது அமரர்களும் நபியின் மீது ஸலவாத் சொல்கின்றனர். விசுவாசிகளே! நீங்களும் அவர் மீது ஸலவாத்தும் ஸலாமும் சொல்வீர்களாக. (33 : 56)

என்ற திருவசனத்தின் மூலம் பூமான் நபி மீது ஸலவாத்துரைக்கப் பணிக்கும் இறைவன் அதே வசனத்தின் மூலம் சாந்த நபி மீது ஸலாம் சொல்வதையும் ஏவியிருக்கிறான்.

எனவே எத்தனை முறை ஸலாம் சொன்னாலும் அதை எடுத்துச் சென்று ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் எத்திவைக்க எத்தனையோ வானவர்கள் எதிர் பார்த்திருக்கிறார்கள் என்பதை தொடரும் ஹதீஸ்துலங்கச் செய்வதைப் பாருங்கள்.

عَنْ اِبْنِ مَسْعُوْدٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ قَالَ رَسُوْلُ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ اِنَّ لِلّٰهِ مَلَائِكَةً سَيَّاحِيْنَ فِي الْاَرْضِ يُبَلِّغُوْنِيْ مِنْ اُمَّتِي السَّلَامُ

அல்லாஹ்விற்கு சில விஷேச வானவர்கள் இருக்கின்றனர். இந்த பூமியில் என் உம்மத்துக்கள் என்மீது சொல்லும் ஸலாமினை என்னிடம் எத்தி வைக்கிறார்கள். (நஸயீ–தாரமி)

عَنْ اَبِيْ هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ قَالَ رَسُوْلُ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ مَا مِنْ اَحَدٍ يُسَلِّمُ عَلَيَّ اِلَّا رَدَّ اللّٰهُ عَلَيَّ رُوْحِيْ حَتّٰى اَرُدَّ عَلَيْهِ السَّلَامُ

அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள் அருமை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறினார்கள். ஒவ்வொரு முஸ்லிமும் எனக்கு ஸலாம் கூறினால் அல்லாஹ் எனது ரூஹை என்னிடம் திருப்பித் தருகிறான். அவரது ஸலாமிற்கு நான் பதிலளிக்கிறேன் (அபூதாவூத்)

நயனம் குளிர்ந்திடும் நாயகவாக்கின் வழியே ஒரு உண்மை உலகிற்கு உணர்த்தப்படுகிறது. சொல்லப்படும் ஸலாமை ஏந்திச் சென்று எத்தி வைப்பதற்கு வானவர்கள் தயாராக இருக்கின்றனர். ஆசையாய் உம்மத்துக்கள் சொன்ன ஸலாமிற்கு நேசமாய் பதில் கூற நம் நெஞ்சம் நிறைந்த நாயகம் ஸல்லுல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தயாராக இருக்கிறார்கள். பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித நாவிலிருந்து பதில் ஸலாம் பெறும் நஸீபைவிட நமக்கு வேறு என்ன பாக்கியம் வேண்டும்? அந்த நற்பாக்கியத்தை நமக்கு நல்கும் மௌலிது ஷரீபை தினம் தினம் ஓதினாலும் தகுமன்றோ?

? குற்றச்சாட்டு

اَلسَّلَامُ عَلَيْكَ يَامَاحِىَ الذُّنُوْب

اَلسَّلَامُ عَلَيْكَ يَاجَالِىَ الْكُرُوْب

பாவங்களை அழிப்பவரே உங்கள்மீது ஸலாம் உண்டாவதாக ! கவலைகளைக் களைபவரே உங்கள் மீது எம் ஸலாம் உண்டாவதாக ! இதில் அவர்கள் கண்ட குறை பாவங்களை அழிப்பதும், கவலைகளைக் களைவதும் அல்லாஹ் அல்லவா? அண்ணல் நபியை கூறுவது அபத்தமல்லவா ?

**விளக்கம்**

இந்த வாசகங்கள் மறைவசனங்களிலும், மாநபியின் மணி மொழிகளிலும் தொக்கி நிற்கும் இரகசியங்களே என்ற உண்மையை இவர்கள் உணராமல் போனது ஆச்சரியத்திற்குரியதல்ல. எந்த உண்மையை தெரிந்தார்கள் இதைத் தெரிவதற்கு?

தாம் கொண்டிருக்கும் கருத்துக்கேற்ப குர்ஆன், ஹதீஸில் இருந்தால் மட்டுமே ஏற்பதும், தம் கருத்தோடு முரண்படும் மறை, நபி மொழிகளை மறுப்பதும் இவர்களுக்கொன்றும் புதிதல்ல.

தேவை ஏற்படின் திருமறை வசனங்களையும், மாநபிமொழிகளையும், தம் கருத்துக்கேற்ப வளைத்து, திரித்து, அதன் அர்த்தங்களை அனர்த்தமாக்குவதற்கும் தயங்காத இவர்களுக்கு அதுவே கை வந்த கலையும் கூட.

பன்றியின் மாமிசம் மட்டுமே தடை செய்யப்பட்டுள்ளது,

அதன் எலும்புகளை உபயோகப் படுத்தலாம் என அதிமேதாவி தீர்ப்புக் கூறி தன்னை நம்பியோரின் உதிரங்களில், தடுக்கப்பட்ட பிராணியின் ஊணத்தை உறைந்திடச் செய்தவர்கள் தானே இவர்கள், என்பதை சமுதாயம் அவ்வளவு எளிதில் மறந்துவிடாது. இப்படி திருக்குர்ஆனையே திரித்துப்பார்த்த இவர்களின் ஊனப்பார்வைகளுக்கு எப்படி மௌலிதின் வாசகங்கள் முறையாகத் தெரியும்.

“மாஹீ” பாவங்களை அழிக்கக் கூடியவர் என்ற பெயர் ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குரியதே என்பதை உணர்த்தும் ஹதீஸின் பக்கம் நம் பார்வையை செலுத்தலாம் வாருங்கள். அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

عَنْ مُحَمَّدِ بْنِ جُبَيْرِ بْنِ مُطْعِمٍ عَنْ أَبِيهِ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ قَالَ رَسُوْلُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ لِي خَمْسَةُ

أَسْمَاءٍ أَنَا مُحَمَّدٌ وَأَنَا أَحْمَدُ وَأَنَا الْمَاحِي الَّذِي يَمْحُو اللهُ بِيَ الْكُفْرَ وَأَنَا الْحَاشِرُ الَّذِي يُحْشَرُ النَّاسُ عَلَى قَدَمِي وَأَنَا الْعَاقِبُ

எனக்கு ஐந்து பெயர்கள் உள்ளன. நான் முஹம்மது புகழப்பட்டவர் ஆவேன். நான் அஹ்மத் இறைவனை அதிகம் புகழ்பவர் ஆவேன். நான் மாஹீ அழிப்பவர் ஆவேன் என் மூலம் அல்லாஹ் இறை நிராகரிப்பை அழிக்கிறான். நான் ஹாஷிர். ஒன்று திரட்டுபவர் ஆவேன். மக்கள் என் பாதத்தில் ஒன்றுத் திரட்டப்படுவார்கள். நான் ஆகிப் (இறைத்தூதர்களில்) இறுதியானவர் ஆவேன். (புகாரி ஷரீப் 3532)

மேற்கண்ட நபி மொழியில் மாநபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என் பெயர் "மாஹீ" நான் (அழிக்கக்கூடியவர்) என்று பெருமைபட கூறியுள்ளார்கள்.

பாவங்களிளெல்லாம் மாபெரும் பாவமான (குப்ரு) இறை நிராகரிப்பே அண்ணலைக் கொண்டு அழிக்கப் படும் போது ஏனைய பாவங்கள் ஏன் அழிக்கப்படாது?

اَلسَّلَامُ عَلَيْكَ يَاجَالِي الْكُرُوْبِ

கவலைகளைக் களைபவரே உம்மீது ஸலாம் உண்டாவதாக !.

கண்மணி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கண்டால் ஸஹாபிகளின் கவலைகள் காற்றோடு கரைந்துவிடும் அவர்களின் பொன்மொழி

களாம் ஹதீஸை காணும் போதும் அதை ஓதும்போதும், அவற்றை செயலுறுவில் நிறுத்தும் போதும் கனத்த இதயமும், கவலை மறந்து கற்கண்டாய் இனிக்கிறது.

உதடுகள் ஒன்றுடன் ஒன்று முத்தமிட்டு முகமது மலர்ந்து முஹம்மது எனமுயர் பூமானின் புகழ் நாமத்தை உரைக்கும் போதெல்லாம் ஆஷிகீன்களான நாயகக் காதலர்களின் நயனமெல்லாம் குளிர்ந்து உள்ளம் உவகைக் கொள்கிறது. மொத்தத்தில் கவலைகள் தடம் தெரியாமல் மறைந்து விடுகிறது. எந்நேரமும் நாயகத்தின் நினைவிலேயே தன்னை ஆட்படுத்திக் கொண்ட அவ்லியாக்களுக்குத்தான் கவலையோ அச்சமோ கிடையாது என்று இறைவன் கூறிவிட்டானே. அத்தனைக்கும் காரணம் அண்ணல் நபி என்ற அழகு நாதர்தானே?

ஆமாம் அஹ்லுஸ் சுன்னத்வல் ஜமாஅத்தினருக்குத் தானே இது பொருந்தும். மவ்லிதை மறுப்போருக்கு ஆதாரம் அல்லவா காட்டவேண்டும் என்ற கேள்வி இதுவரை உங்கள் உள்ளத்தில் உதித்திருக்க வேண்டும். உண்மை தான். வாருங்கள் அதையும் விவரிப்போம்.

தனிமை தரும் சோகத்தை சுகமாக்க கப்ரிலும், மறுமையின் அனல் தணிக்க மஹ்ஷரிலும் ஆதரவற்று கைபிசைந்து நிற்கதியில் நிற்கையிலே நேசக்கரம் நீட்டி

பாசம் பொழிந்து காக்கும் அருமை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை கவலைகளைக் களைபவரே என்றழைப்பது எப்படித் தவறாகும்.

? குற்றச்சாட்டு

اَلسَّلَامُ عَلَيْكَ يَا مُبْرِى السَّقَامِ

நோய்களை குணமாக்கும் நாயகமே உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக !

وَلَوْ تَكُوْنُ سَقِيْمًا لَدَيْهِ بُرْءُ السَّقَامِ

நீ நோயாளியாக இருந்தால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் நிவாரணம் இருக்கிறது! இதில் அவர்கள் கண்ட தவறு, நோயை சுகமாக்குவது அல்லாஹ்தானே. ஆனால் இங்கே நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கூறப்படுகிறது. சுகமாக்குபவன் ஷாபி என்ற அல்லாஹ்வின்தன்மைப் பெயர் அண்ணலாருக்கு எப்படி பொருந்தும்.

✍ விளக்கம்

ஷாபி சுகமாக்குபவன் என்ற பெயர் அல்லாஹ்வுக்கு மட்டுமே உண்டு. அதை அருமை நபி ஸல்லல்லாஹு

அலைஹி வஸல்லம் அவர்களுக்கு சூட்டுவது பொருத்தமில்லை என்று வருத்தமுறும் இவர்கள் தங்கள் நோய்களுக்காக நிவாரணம் தேடி மருத்துவர்களை அணுகுவது மட்டும் எப்படி சரியாகும்?

ஆருயிர் அண்ணலின் அருமந்த தோழர்களான ஸஹாபிகள் தம் வாழ்வின் அசைவுகள் ஒவ்வொன்றையும் பெருமானின் பாதச் சுவட்டிலேயே பதித்து வெற்றிக்கண்ட நாதர்கள் வாழ்வில் நிகழ்ந்த தகவல்களை தருகிறோம் பாரீர்.

ذَهَبَتْ بِيْ خَالَتِيْ إِلَى رَسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَتْ يَا رَسُوْلَ اللّٰهِ إِنَّ ابْنَ أُخْتِيْ وَقِعٌ، فَمَسَحَ رَأْسِيْ، وَدَعَا لِيْ بِالْبَرَكَةِ، وَتَوَضَّأَ فَشَرِبْتُ مِنْ وَضُوْئِهِ، ثُمَّ قُمْتُ خَلْفَ ظَهْرِهِ فَنَظَرْتُ إِلَى خَاتَمِ النُّبُوَّةِ بَيْنَ كَتِفَيْهِ

ஸாயிப் இபுனு யஜீத் ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள்.

என் தாயின் சகோதரி என்னை அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் அழைத்துச் சென்று நாயகமே! என் சகோதரியின் மகனுக்கு (பாதங்களில்) நோய் கண்டுள்ளது என முறையிட்டார்கள். உடனே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என் தலையை வருடிக் கொடுத்து,

என் நலத்திற்காகப் பிரார்த்தித்தார்கள். பின்னர் வுளூ செய்தார்கள். அவர்கள் வுளூ செய்த தண்ணீரை நான் சிறிது குடித்தேன். பிறகு நான் அவர்களின் முதுகுக்குப் பின்னே நின்று அவர்களது இரு புஜங்களுக்கிடையே இருந்த நபித்துவ முத்திரையை பார்த்தேன்.

(புகாரி ஷரீப் 3541, 190)

ஜுஅய்த் பின் அப்துர் ரஹ்மான் ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள். சாயிப்பின் யஜீத் ரழியல்லாஹு அன்ஹு அவர்களைத் தொண்ணுற்று நான்கு வயது உடையவர்களாக (அந்த வயதிலும்) திடகாத்திரமானவர் களாக நான் கண்டேன். (கூன் விழாமல்) முதுகு நிமிந்தவர்களாக நான் கண்டேன். அவர்கள், எனக்குக் கேள்விப் புலன், மற்றும் பார்வைப் புலனின் நலம், அல்லாஹ்வுடைய தூதரின் துஆவால் தான் வழங்கப்பட்டது என்று நான் அறிந்திருக்கிறேன் என்றார்கள். (புகாரி ஷரீப் 3540)

யாரோ அடையாளம் தெரியாத ஒருவரால் புனையப்பட்ட கதையோ கற்பனையோ இல்லை. மாறாக நன்கு அறிமுகமான ஸஹாபி ஸாயிப் பின் யஜீத் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் வாழ்வில் நிகழ்ந்த இந்நிகழ்வு புனித புகாரி ஷரீப் கிரந்தத்தின் பல்வேறு பகுதிகளிலும் பதியப்பட்டிருக்கிறது.

உடல் நலமில்லையென்றால் மருத்துவரிடம் தான் செல்லவேண்டுமென்பது கூடவா அந்த ஸஹாபிக்கும் அவர்களின் சாச்சிக்கும் தெரியாமல் போனது? பின்னர் ஏன் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் சென்று நோய் பற்றி முறையிட்டார்கள். அவர்கள் அப்படி முறையிட்ட போது கூட, அதை ஏன் என்னிடம் சொல்கிறீர்கள் ஏதாவது மருத்துவரை அணுகுங்கள் என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களாவது சொன்னார்களா?

இந்நிகழ்வின் மூலம் பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் தான் அக, புற நோய்களை அகற்றும் சஞ்சீவி அமைந்துள்ளது என்பதைப் புரிவதில் புத்தியுள்ளோருக்கு தாமதம் ஏற்படாது.

## கண்வலி

கைபர் யுத்த களத்தில் அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள். அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நேசிக்கின்ற, அல்லாஹ்வின் அவனது தூதரின் நேசத்தைப் பெற்ற ஒரு மனிதரிடம் நாளை கொடியைத் தரப்போகிறேன். அல்லாஹ் அவருக்கு வெற்றியளிப்பான். என்று

கூறினார்கள். அந்தக் கொடி தங்களில் எவரிடம் தரப்படும் என்ற சிந்தனையில் ஸஹாபிகள் இரவெல்லாம் மூழ்கியிருந்தனர்.

மறுநாள் காலை தம்மிடம் தரப்பட வேண்டுமே என்ற ஆசையில் நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்தனர். அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அலி எங்கே என்றார்கள்?

அல்லாஹ்வின் தூதரே அவருக்கு கண் வலி ஏற்பட்டுள்ளது என்று கூறப்பட்டது.

அவரை அழைத்துவரும்படி ஆளனுப்புமாறு சொன்னார்கள். அழைத்து வரப்பட்ட அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கண்களில் தமது உமிழ்நீரை உமிழ்ந்து அவருக்காகப் பிரார்த்தித்தார்கள். உடனே அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கண் அதற்கு முன்பு வலி எதுவுமே இல்லாதிருந்ததைப் போன்று குணமாகி விட்டது (புகாரி ஷரீப் 4210)

கண்ணில் வலி என்றால் மருத்துவரிடம் தானே செல்லவேண்டும்? அறிவின் தலைவாயில் அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் மாநபியிடம் முறையிட்டது, அண்ணல் நபியவர்கள் தான் தம் நோயை சுகப்படுத்த முடியும் என்ற இரகசியத்தை தெரிந்ததாலல்லவா?

கழன்று விட்ட கண்ணை கையிலே எடுத்து வந்து கண்மணி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் முறையிட்டு கண்ணைப் பொருத்தி பார்வை பெற்ற கதாதா ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் நிகழ்வு போல் ஆயிரமாயிரம் உண்டு.

## முறிந்த கால் மூட்டு

யூதர்கள் முஸ்லிம்களுடன் யுத்தம் செய்வதற்கு பொருளுதவி செய்தும், பல்வேறு முறைகளில் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை மன உளைச்சலுக்கு உட்படுத்தும் யூதத்தலைவர்களில் ஒருவரான அபூ ராபிவு என்பவனை அவன் கோட்டைக்குள்ளேயே சென்று, கொன்று விட்டு மாடியிலிருந்து கீழே இறங்கிய அப்துல்லாஹ் இபுனு அதீக் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுடைய கால்முறிந்து போய்விட்டது உடனே தலைப்பாகையால் அவர்களே கட்டுப்போட்டுக் கொண்டு அண்ணல் நபிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் வந்து தகவல் தெரிவித்தார்கள்.

அப்போது நபியவர்கள், அவர்களின் காலை நீட்டச் செய்து புனிதக் கரத்தால் தடவினார்கள். அந்தக் காலில் அப்படியொரு வேதனை இருந்ததற்கு அடையாளமே

இல்லாமல் மாறி விட்டது என அவர்களே அறிவிக்கிறார்கள். (புகாரி ஷரீப் 4039)

நீண்ட ஹதீஸின் சுருக்கமான இந்நிகழ்வின் வழியே வள்ளல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மருத்துவத்தில் பல் கலை நிபுணராக திகழ்கிறார்கள் என்பதை புரிய முடிகிறது.

அப்துல்லாஹ் இப்னு அதீக் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தம் உடைந்த காலைப்பற்றி உத்தம நபியிடமே உரைத்ததின் மூலம் உண்மையை உலகத்திற்கு வெளிச்சமிட்டு காட்டுகிறார்கள்.

## மறதிக்கு மருந்து

عَنْ اَبِي هُرَيْرَةَ رَضِىَ اللّٰهُ عَنْهُ قَالَ قُلْتُ يَارَسُوْلَ اللّٰهِ اِنِّيْ سَمِعْتُ مِنْكَ حَدِيْثًا كَثِيْرًا فَاَنْسَاهُ قَالَ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ اُبْسُطْ رِدَاءَكَ فَبَسَطْتُهُ فَغَرَفَ بِيَدَيْهِ فِيْهِ۔ ثُمَّ قَالَ ضُمَّهُ فَضَمَمْتُهُ فَمَا نَسِيْتُ حَدِيْثًا بَعْدُ

அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள் அல்லாஹ்வின் தூதரே நான் உங்களிடமிருந்து நிறைய செய்திகளை கேட்கிறேன். ஆனால் அவற்றை நான் மறந்து விடுகிறேன் என்று சொன்னேன். நபி

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உன் மேலங்கியை விரி என்று சொன்னார்கள். நானும் விரித்தேன். பிறகு அவர்கள் தம் இருகைகளால் (எதையோ அள்ளுவது போல் சைகை செய்து) அதில் அள்ளி (க் கொட்டி)னார்கள்.

பிறகு இதைச் சேர்த்து (நெஞ்சோடு) அணைத்துக் கொள் என்று சொன்னார்கள். நானும் அவ்வாறே செய்தேன்.அதன் பிறகு எந்த ஹதீஸையும் நான் மறக்கவில்லை (புகாரி ஷரீப் 119,3648)

உடல் ரீதியான நோய்கள் மட்டுமின்றி உளரீதியிலான, உணர்வுகள் ரீதியிலான, எல்லா நோய்களுக்கும் ஏந்தல் நபியிடமே மருந்துண்டு என்பதை இந்நிகழ்வு நிரூபிக்கிறது.

## பலவீனம் போக

ஜரீர் ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள்.

وَلَقَدْ شَكَوْتُ اِلَيْهِ اَنِّيْ لَا اَثْبُتُ عَلَى الْخَيْلِ فَضَرَبَ بِيَدِهٖ فِيْ صَدْرِيْ وَقَالَ اَللّٰهُمَّ ثَبِّتْهُ وَاجْعَلْهُ هَادِيًا مَهْدِيًّا

நான் குதிரையின் மீது சரியாக அமரமுடியாதவனாக இருக்கிறேன் (கீழே விழுந்துவிடுகிறேன்) என முறையிட்ட

போது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்என் நெஞ்சில் தம் கரத்தால் அடித்து, இறைவா இவரை உறுதிபடுத்தி, இவரை நேர்வழி காட்டுபவராகவும், நேர்வழியில் செலுத்தப்பட்டவராகவும் ஆக்கு என பிரார்த்தனை செய்தார்கள் (புகாரி ஷரீப் 3020,3036)

பூமான் நபியவர்கள் புனிதக்கரத்தால் தடவிக் கொடுத்தப்பின் பலவீனம் பலமாக மாறி விட்டது.

மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மனிதர்களுக்கு மட்டுமல்ல, மிருகங்களின் நோய்களையும் நிவர்த்தியாக்கியுள்ளார்கள் என்பதை நிரூபிக்கும் நிகழ்வு புனித புகாரி ஷரீபில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

عَنْ اَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ اِنَّ اَهْلَ الْمَدِيْنَةِ فَزِعُوْا مَرَّةً فَرَكِبَ النَّبِيُّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ فَرَسًا لِاَبِيْ طَلْحَةَ كَانَ يَقْطِفُ اَوْكَانَ فِيْهِ قِطَافٌ۔ فَلَمَّا رَجَعَ قَالَ وَجَدْنَا فَرَسَكُمْ هٰذَا بَحْرًا فَكَانَ بَعْدَ ذٰلِكَ لَا يُجَارِيْ

அனஸ் பின் மாலிக் ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள். மதீனா வாசிகள் ஒருமுறை எதிரிகள் படையெடுத்து வருவதாக செவியுற்று) பீதிக்குள்ளா னார்கள். ஆகவே நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அபூதல்ஹா ரழியல்லாஹு அன்ஹு அவர்

களுக்குச் சொந்தமான மந்தமாக நடக்கும் குணமுடைய ஒரு குதிரையின் மீது ஏறிச் சவாரி செய்தார்கள்.

திரும்பி வந்தபோது உங்களுடைய இந்தக் குதிரையை தங்கு தடையின்றி வேகமாக ஓடக் கூடியதாக நாம் கண்டோம். என்று கூறினார்கள். அதற்குப் பிறகு அந்த குதிரையை வேறெந்த குதிரையும் (வெல்ல முடியாத அளவிற்கு பந்தயத்தில்) முந்த முடியாததாக மாறிவிட்டது. (புகாரி ஷரீப் 2867)

இது போன்ற இன்னும்பல நிகழ்வுகளை ஆதாரமாகக் கொண்டே மௌலிது ஷரீபில் மாநபியை சுகம் தருபவர் என சிலாகிக்கப்பட்டுள்ளது. இதை புரிந்து கொள்ளாதவர் களின் கண்களுக்குத்தான் இந்த வாசகங்கள் தவறாகப் படுகிறது.

**? குற்றச்சாட்டு**

أَنْتَ شَمْسٌ أَنْتَ بَدْرٌ
أَنْتَ نُورٌ فَوْقَ نُورٍ

நபியே நீங்கள் சூரியனாகவும், சந்திரனாகவும் இலங்கு கிறீர்கள் ! நீங்கள் ஒளிகளுக்கெல்லாம் மேலான பேரொளி யாக இருக்கிறீர்கள் !!.

இந்த வாசகம் ஒரு கவிஞர் வேண்டுமென்றே சில

பொய்களை கவிதைகளாக புனைவது போன்று, இங்கும் புனையப்பட்டிருக்கிறது. இவைகளுக்கெல்லாம் மார்க்கத்தில் எந்த விதத்திலும் ஆதாரம் இல்லை.

**விளக்கம்**

மார்க்கத்தில் ஆதாரமில்லை என்பது அவர்கள் சார்ந்திருக்கும் மார்க்கத்தில் தானேயன்றி இஸ்லாத்தில் அல்ல. ஏனெனில் பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அழகையும் மென்மையினையும் ஸஹாபிகள் புகழ்ந்த தகவல்கள் ஹதீஸ் ஏடுகளின் நெடுகிலும் நிறைந்து இருக்கிறது.

இமாம்களை பின்பற்றத் தேவையில்லை குர்ஆன், ஹதீஸை சுய சிந்தனையிலேயே பின்பற்றலாம் என வாதிக்கும் வஹ்ஹாபியர்கள், தம் கருத்தை தன்னை சார்ந்தவர்களிடம் திணிக்கின்றனர், அதை முழுமையாக நம்பிக் கொண்ட மக்கள் நாமும் பிறரைத்தானே பின்பற்றுகிறோம் என்பதை உணராது உளரத்துவங்கி விடுகின்றனர்.

நான்கு இமாம்களை பின்பற்றக் கூடாது என்று ஒப்பாரி வைத்த இவர்கள், துண்டு துண்டாக சிதறுண்டு போய் கிடப்பதையும், அவர்களிலேயே ஒருவருக்கொருவர் தங்களுக்கிடையே நடந்த தவறுகளை சொல்லிக்காட்டி, குழாய் அடியில் நடைபெறும் குடுமிப்பிடி சண்டைபோல்

மாத, வார ஏடுகளில் நடைபெறும் ஃபிர்ம சண்டைகளால் அன்றாடம் அசிங்கப்பட்டு வருவதும் மக்கள் மன்றத்திற்கு வாடிக்கையான வேடிக்கையாக நிகழ்ந்து வருகிறது.

நாளுக்கு நாள் கொள்கையை மாற்றுவதே தொழிலாகக் கொண்ட அவர்கள் மார்க்கத்தில் வேண்டு மானால் மவ்லிது முரண்பட்டதாக இருக்கலாம். ஆனால் அரியமார்க்கமாம் இஸ்லாத்தில் அங்கீகரிக்கப்பட்டதே என்பதை அறிவோம்.

يَاَيُّهَا النَّبِيُّ اِنَّا اَرْسَلْنٰكَ شَاهِدًا وَّمُبَشِّرًا وَّنَذِيْرًا ۙ وَدَاعِيًا اِلَى اللّٰهِ بِاِذْنِهٖ وَسِرَاجًا مُّنِيْرًا

நபியே உங்களை சாட்சி பகருபவராகவும், (சுவனத்தைக் கொண்டு) நற்செய்தியறிவிப்பவராகவும், நரகத்தைக் கொண்டு) அச்சமூட்டுபவராகவும், அல்லாஹ் வின்பால் அவன் அனுமதியைக் கொண்டு அழைப்பவராக வும், ஒளி உமிழும் விளக்காகவும் அனுப்பினோம்.

மேற்கண்ட வசனத்தில் இறைவன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை சிராஜன் முனீரா என்று ஒளி உமிழும் தீபம் என்று வருணிக்கிறான். அதற்காக பயன்படுத்திய, "சிராஜ்" என்ற வார்த்தையை உபயோகித்தே சூரியனையும் குறிப்பிடுகிறான். எனவே பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை اَنْتَ شَمْسٌ நீங்கள் சூரியனாக

இருக்கிறீர்கள் என்று வருணித்த முதல் கவிஞன் இறைவன் என்பதை நினைவில் நிறுத்த வேண்டும். இப்பொழுது சொல்லுங்கள் இது சரியா? தவறா?

## பூரணச்சந்திரன்

عَنْ اَبِي اِسْحَاقَ قَالَ سُئِلَ الْبَرَاءُ اَكَانَ وَجْهُ النَّبِيِّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ مِثْلَ السَّيْفِ؟ قَالَ لَا بَلْ مِثْلُ الْقَمَرِ

அபூ இஸ்ஹாக் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள். பராவு ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் கேட்கப்பட்டது. பூமான் நபியின் பொன்வதனம் வாளின் ஒளி போன்றதா? என்று கேட்டதற்கு, இல்லை பூரணச் சந்திரன் போன்றவர்கள் என பதிலளித்தார்கள். (புகாரிஷரீப் 3552)

அப்துல்லாஹ்பின் கஅப் ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள்.

فَلَمَّا سَلَّمْتُ عَلٰى رَسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَهُوَ يَبْرُقُ وَجْهُهُ مِنَ السُّرُوْرِ وَكَانَ رَسُوْلُ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ اِذَا سُرَّ اسْتَنَارَ وَجْهُهُ حَتّٰى كَاَنَّهُ قِطْعَةُ قَمَرٍ

அல்லாஹ்வின் தூதருக்கு நான் ஸலாம் சொன்னேன். அவர்களின் (பொன்னிற) முகம் மகிழ்ச்சியால் மின்னிக் கொண்டிருந்தது. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு

அலைஹி வஸல்லம் அவர்கள் மகிழ்ச்சியடைந்தால் அவர்களுடைய முகம் சந்திரனின் ஒரு துண்டைப்போல் பிரகாசமாகிவிடும் (புகாரிஷரீப் 3556)

عَنْ جَابِرِ بْنِ سَمُرَةَ قَالَ رَأَيْتُ رَسُوْلَ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي لَيْلَةٍ اَضْحِيَانٍ وَعَلَيْهِ حُلَّةٌ حَمْرَآءُ فَجَعَلْتُ اَنْظُرُ اِلَيْهِ وَاِلَى الْقَمَرِ فَاِذَا هُوَ اَحْسَنُ عِنْدِيْ مِنَ الْقَمَرِ

ஜாபிர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள். வெந்நிலா ஒளி வீசிக் கொண்டிருக்கும் ஒரு இரவில் நான் நபியவர்களை பார்த்தேன். அந்நேரம் அவர்கள் சிவப்பு ஆடை அணிந்திருந்தார்கள். நான் அவர்களை ஒருமுறை பார்ப்பேன் மறுமுறை சந்திரனைப் பார்ப்பேன்.

என்னிடத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே சந்திரனை விட மிக அழகுப் பிரகாசமாக இருந்தார்கள். (திர்மிதி)

عَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللهُ عَنْهُمَا قَالَ. كَانَ رَسُوْلُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ اَفْلَجَ الثَّنِيَّتَيْنِ اِذَا تَكَلَّمَ رُأِيَ كَالنُّوْرِ يَخْرُجُ مِنْ بَيْنِ ثَنَايَاهُ

இபுனு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹுமா அவர்கள் கூறுவதாவது எம் பெருமான் ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லம் அவர்களின் முன் பற்கள் சற்று இடை விட்டவை களாக இருந்தன. அவர்கள் பேசும்போது அந்தப் பற்களிலிருந்து ஒளிவீசிக் கொண்டிருப்பது போல் இருக்கும்.

இப்படி எத்துணையோ ஸஹாபிகள் எம்மானின் பேரழகை பேசி பெருமை பட்டிருக்கும்போது அதை புரிந்து கொள்ளாமல் குறை கூறுவோர் சிறுமதியாளர்கள்தானே?

عَنْ اَبِىْ هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ مَا رَأَيْتُ شَيْئًا اَحْسَنَ مِنْ رَّسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ كَاَنَّ الشَّمْسَ تَجْرِيْ فِيْ وَجْهِهٖ

அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள். நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விட அழகில் சிறந்த எதையும் நான் கண்டதில்லை.

நிச்சயமாக சுந்தரநபியின் வதனத்திலே சூரியன் சுற்றி வருவதைப் போன்றிருக்கும். (மிஷ்காத்)

நிலவைப் பழித்திடும் நீதர் நபியின் வதனப்பேரழகு பார்ப்போரை பரவசத்தில் ஆழ்த்தும், நினைத்தால் நெஞ்சினிக்கும், கேட்டால் காதினிக்கும் சொல்லச் சொல்ல நாவினிக்கும், ஆய்ந்தால் அறிவினிக்கும், அந்தப் பேரழகு கவிதை என்கிற வார்த்தைச் சிறைக்கு

வசப்படாதது.

எனவே தான் சாந்த நபியை சூரியன் என்றும், சந்திரன் என்றும் புகழ்ந்து, புகழ்ந்து முடிவில் தன் முடிவுகாண முடியா இயலாமையையே இயம்பியிருக்கின்றனர் கவிஞர்கள். இவைகளை வெறுமனே கவிதைக் கண்கொண்டு பார்த்து குறைகூற முனைவோர் கருத்துக் குருடரேயன்றி வேறில்லை.

## ஸஹாபிகளின் பார்வையில்

ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா கூறியதாவது :

ஹழ்ரத் யூசுப் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் அழகு முகத்தைக் கண்டு மயங்கி கனிக்கு பதிலாக கையை அறுத்த அரிவையர்கள் என் ஆருயிர் பெருமானின் அழகை மட்டும் ரசித்திருப்பார்களாயின் தம் உயிரையே இழந்திருப்பார்கள் என்றார்கள்.

عَنْ اَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ مَامَسَسْتُ حَرِيْرًا وَّلَا دِيْبَاجًا اَلْيَنَ مِنْ كَفِّ رَسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ. وَلَا شَمَمْتُ رِيْحًا قَطُّ. اَوْعَرْفًا قَطُّ اَطْيَبَ مِنْ رِيْحِ اَوْعَرْفِ النَّبِيِّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ

அனஸ் ரழியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள்.

அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் உள்ளங்கையை விட மென்மையான பட்டையோ (பூ. வேலை செய்யப்பட்ட) தூய்மையான பட்டையோ நான் தொட்டதில்லை. அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உடல் மணத்தைவிட சுகந்தமான ஒரு நறுமணத்தை நான் நுகர்ந்ததேயில்லை. (புகாரி ஷரீப் 3561)

عَنْ اَبِيْ سَعِيْدِ الْخُدْرِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ. كَانَ النَّبِيُّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ اَشَدَّ حَيَاءً مِنَ الْعَذْرَاءِ فِيْ خِدْرِهَا

அபூ ஸயீதுல் குத்ரீ ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திரைக்குள் இருக்கும் கன்னிப் பெண்ணை விடவும் அதிக வெட்கமுடையவர்களாயிருந்தார்கள். (புகாரிஷரீப் 3562)

عَنْ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا اَنَّ النَّبِيَّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ كَانَ يُحَدِّثُ حَدِيْثًا لَوْ عَدَّهُ الْعَادُّ لَاَحْصَاهُ

ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறு கிறார்கள். அருமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல் லம் ஒரு விஷயத்தை பேசுகிறார்கள் என்றால், (அதை வார்த்தை வார்த்தையாக, எழுத்து எழுத்தாகக்) கணக்

கிட்டு எண்ணக் கூடியவர் எண்ணியிருந்தால் ஒன்று விடாமல் எண்ணியிருக்கலாம் (அந்தளவிற்கு) நிதான மாக தெளிவாக பேசிவந்தார்கள்) (புகாரி ஷரீப் 3567)

மாநபியின் மன்னிக்கும் மாண்பைப் பற்றி அன்னை ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அறிவிக்கிறார்கள்.

وَلَا يَجْزِي بِالسَّيِّئَةِ السَّيِّئَةَ وَلٰكِنْ يَعْفُوْ وَيَصْفَحُ

மேலும் (நபியவர்கள்) தீங்குக்குத் தீங்கைக் கொண்டு பழி வாங்க மாட்டார்கள். அதை மன்னித்து விட்டு பொருட்படுத்தாமல் இருந்து விடுவார்கள்.

(ஷமாயில் திர்மிதி)

இப்படி பல்வேறு பொன்மொழிகளின் வழியே ஸஹாபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அழகையும், அழகு குணாதிசியங்களையும் சுவைபட உரைத்திருக்கிறார்கள். இவைகளையெல்லாம் கற்பனையென்றோ, கதை, கவிதை என்றோ குறுகிய வட்ட வடிவத்தில் வைத்துப்பார்த்தால் பார்ப்போரின் பார்வையில் ஏற்பட்ட பழுதும், பலவீனமும் தான் காரணமாகும் என்பதை கருத்தில் கொள்ள வேண்டும். இன்னும் பல அரிய தகவல்கள் இருப்பினும் விரிவஞ்சி விடுகிறோம்.

? குற்றச்சாட்டு

أَنْتَ غَفَّارُ الْخَطَايَا وَالذُّنُوبِ الْمُوبِقَاتِ

(நபியே) நீங்களே எம் சிறு, பெரு பாவங்களை மன்னிப்பவர்கள்.

وَمَنْ يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا اللَّهُ

அல்லாஹ்வைத் தவிர வேறு யார் பிழைகளை மன்னிப்பார்? என்று அல்லாஹ் கேட்கிறான். எனவே மௌலிதில் கூறப்பட்டிருக்கும் இந்தச் செய்தி குர்ஆனுக்கு முரணானதாகும்.

**விளக்கம்**

நமது இனிய மார்க்கமாம் இஸ்லாத்தில் கடமைகள் இரண்டு வகைப்படும் 1. அல்லாஹ்வுக்கு ஆற்ற வேண்டியது 2. அடியார்களுக்கு ஆற்றவேண்டியது.

அல்லாஹ்விற்கு ஆற்ற வேண்டிய கடமைகளில் குறை வைத்த மனிதனை அல்லாஹ் நாடினால் மன்னிப்பான், அல்லது தண்டிப்பான், மன்னிப்பும், தண்டிப்பும் அல்லாஹ்வின் புறத்திலுள்ளது. ஆனால் மனிதர்கள் பிற மனிதர்களுக்கு புரிய வேண்டிய உரிமைகளிலும், கடமைகளிலும் குறைசெய்தால், அந்த மனிதர் மன்னிக்காத வரை அல்லாஹ் மன்னிப்பதில்லை.

உதாரணமாக ஒருவர் பிறருக்கு கடன் கொடுக்க வேண்டியதிருந்து அதை நிறைவுபடுத்தாத நிலையில் அவர் ஹஜ்ஜுசெய்யவோ, குர்பானி கொடுக்கவோ முடியாது. அல்லது கடன் கொடுத்தவர் மன்னிக்கவோ அல்லது அனுமதிக்கவோ வேண்டும்.

இங்கே மன்னித்தல் என்பது மனிதர்களின் நடைமுறை களிலும் உண்டு என்பதை புரிய முடிகிறது. தவறு செய்து விட்ட பிள்ளைகள் பெற்றோர்களிடமும், மாணவர்கள் ஆசிரியர்களிடமும், தொழிலாளிகள், முதலாளிகளிடமும் மன்னிப்பு தேடுவதும், அவர்கள் மன்னிப்பதும் இவ்வகையை சார்ந்ததே.

اَلَا تُحِبُّوْنَ اَنْ يَّغْفِرَ اللّٰهُ لَكُمْ

அல்லாஹ் உங்களை மன்னிக்க வேண்டும் என நீங்கள் விரும்புவதில்லையா? (24.18)

ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்களின் மீது சுமத்தப்பட்ட அவதூறில் பங்கு கொண்ட மிஸ்தஹ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு, அபூபக்கர் சித்தீக் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் வழமையாக வழங்கி வந்த உதவியை நிறுத்திவிட்டு இனி உதவமாட்டேன் எனவும் சத்தியம் செய்தார்கள் அதைக் குறிப்பிட்டுத்தான்

அல்லாஹ் கூறுகிறான். உங்களை அல்லாஹ் மன்னிக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புவது போலவே, நீங்களும் பிறரை மன்னியுங்கள் என்கிறான்.

மன்னித்தல் இறைவனுக்கு மட்டுமே சொந்தம் என்றிருப்பின் இறைவனே இவ்வாறு இயம்பியதை இவர்கள் எவ்வாறு திரித்து கூறுவார்களோ அல்லாஹ்வுக்கே வெளிச்சம்.

يَا أَيُّهَا النَّبِيُّ إِذَا جَاءَكَ الْمُؤْمِنَاتُ يُبَايِعْنَكَ عَلَىٰ أَن لَّا يُشْرِكْنَ بِاللَّهِ شَيْئًا وَلَا يَسْرِقْنَ وَلَا يَزْنِينَ وَلَا يَقْتُلْنَ أَوْلَادَهُنَّ وَلَا يَأْتِينَ بِبُهْتَانٍ يَفْتَرِينَهُ بَيْنَ أَيْدِيهِنَّ وَأَرْجُلِهِنَّ وَلَا يَعْصِينَكَ فِي مَعْرُوفٍ فَبَايِعْهُنَّ وَاسْتَغْفِرْ لَهُنَّ اللَّهَ ۖ إِنَّ اللَّهَ غَفُورٌ رَّحِيمٌ

நபியே விசுவாசிகளான பெண்கள் உங்களிடம் (பைஅத்) பிரமாணம் செய்வதற்காக வந்து, அல்லாஹ்வுடன் எதையும் இணை வைக்க மாட்டோம், திருட மாட்டோம், விபச்சாரம் புரிய மாட்டோம், குழந்தைகளை கொல்ல மாட்டோம், தம் கை, கால்களுக்கிடையே எந்த அவதூறையும் இட்டுக்கட்ட மாட்டோம் என்றும், எந்த ஒரு நல்ல காரியத்திலும் உமக்கு மாறு செய்ய மாட்டோம் என்றும், வாக்குறுதி அளித்தால்

அவர்களுக்கு (பைஅத்) பிர்மாணம் செய்துவைய்யுங்கள். அவர்களுக்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருங்கள் திண்ணமாக அல்லாஹ் மிக்கமன்னிப்பவனாகவும் கருணைபுரிபவனுமாகவும் இருக்கிறான். (60 : 12)

மேற்கண்ட வசனத்தின் வழியே பெண்கள் பை அத்தைப் பற்றி குறிப்பிடும் இறைவன் அப்பெண்களுக்காக நீங்கள் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருங்கள் என்று கூறியதன் மூலம் தன்னிடம் முறையிட்டவர்களுக்கு தாஹா நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பாவ மன்னிப்பைப் பெற்றுக் கொடுக்கிறார்கள் என்பதைப் புரிய முடிகிறது.

இந்த நிகழ்வை முன்நிறுத்தி நபியவர்கள் அல்லாஹ் விடம் தானே மன்னிப்பை பெற்றுத் தருகிறார்கள். அவர்களால் மன்னிக்க முடியாதுதானே? என்று அதிமேதாவித் தனமான கேள்வியைக் கேட்டாலும் கேட்கலாம்.

அடியார்கள் தாம் செய்த தவறுகளுக்கு அல்லாஹ் விடம் நேரடியாக மன்னிப்பு கேட்பதற்கு இடையில் பெருமானாரை ஏற்படுத்தியதன் மூலம் இறைத்தூதர் இன்றேல் இறைவனை நெருங்க இயலாது என்ற பேருண்மை வெளிச்சம் பெறுகிறது.

எனவே மாநபியை அணுகினாலன்றி மன்னிப்பைப் பெற முடியாது என்பதை அரியவும், புரியவும் முடிகிறது.

வாழ்விலே வழுக்கி விட்டவர்களே, குற்றம் புரிந்து, கறைபடிந்த வாழ்வின் சொந்தக்காரர்களே, ஆத்மா விற்கு அநீதம் செய்தவர்களே, பாவத்தில் மூழ்கி பாழ்பட்ட வர்களே, செய்து விட்ட தவற்றை எண்ணி செய்வ தறியாது திகைத்து நிற்பவர்களே, பாவச்சுமையை இறக்கி வைக்க வழிதெரியாமல் திணருபவர்களே, உங்கள் பாவங்கள் அழிக்கப்பட வேண்டுமா? தவறுகள் மன்னிக்கப்பட வேண்டுமா? குற்றங்கள் அழிக்கவும் ஒழிக்கவும் பட வேண்டுமா ? உங்களுக்கு இருக்கும் ஒரே வழி, உயரியவழி இதோ என்று அல்லாஹ் அடையாளம் காட்டுகிறான் பாரீர்.

وَلَوْ أَنَّهُمْ إِذْ ظَلَمُوا أَنْفُسَهُمْ جَاءُوكَ فَاسْتَغْفَرُوا اللَّهَ
وَاسْتَغْفَرَ لَهُمُ الرَّسُولُ لَوَجَدُوا اللَّهَ تَوَّابًا رَحِيمًا

நபியே ! தமது ஆத்மாக்களுக்கு அநீதம் செய்து கொண்ட அடியார்கள் உம்மிடம் வந்து, அல்லாஹ்விடம் பிழைபொறுக்க வேண்டி, அவர்களுக்காக (நபியே) நீங்களும் மன்னிக்க வேண்டுவீர்களாயின் திண்ணமாக அல்லாஹ்வை மிக்க மன்னிப்பாளனாகவும், கருணை யாளனாகவும் அடைந்து கொள்வார்கள். (4 : 70)

தவறு செய்து விட்ட மானிடரை தாஹா நபியின் பக்கமே தஞ்சம் புகச் செய்யும் தனியவனாம் அல்லாஹ் எந்த வசனத்திலும் கூறாத வித்தியாசமான வழியில் திட்டமாக அல்லாஹ் மன்னித்து விட்டான் என்று கூறுவதன் மூலம் பூமான் நபியிடமே பிழை பொறுப்பு இருக்கிறது என பறை முழங்குகிறான்.

ஒரு கிராமவாசி (அஃராபி) நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கப்ருக்கு வந்தார். மேற்கண்ட திருவசனத்தை ஓதினார்.

وَقَدْ جِئْتُكَ مُسْتَغْفِرًا مِّنْ ذَنْبِي مُسْتَشْفِعًا بِكَ إِلَى رَبِّيْ

நாயகமே ! என் பிழை பொறுக்க உங்களிடமே முன்னோக்குகிறேன், உங்களைக் கொண்டே அல்லாஹ்விடம் பரிந்துரை வேண்டுகிறேன் என்றார். பின்னர் ஒரு கவி பாடினார்.

يَا خَيْرَ مَنْ دُفِنَتْ بِالْقَاعِ أَعْظُمُهُ
فَطَابَ مِنْ طِيْبِهِنَّ الْقَاعُ وَالْأَكَمُ
نَفْسِيْ فِدَاءٌ لِقَبْرٍ أَنْتَ سَاكِنُهُ
فِيْهِ الْعَفَافُ وَفِيْهِ الْجُوْدُ وَالْكَرَمُ

أَنْتَ الشَّفِيعُ الَّذِي تُرْجَى شَفَاعَتُهُ
عَلَى الصِّرَاطِ إِذَا مَا زَلَّتِ الْقَدَمُ
وَصَاحِبَاكَ فَلَا أَنْسَاهُمَا أَبَدًا
مِنِّي السَّلَامُ عَلَيْكُمْ مَا جَرَى الْقَلَمُ

என்ற கவிதையைப் படித்து விட்டுச் சென்றார். அங்கே தூக்கத்திலிருந்த ஹழ்ரத் உத்பீ ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கனவில் கண்மணி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தோன்றி உத்பியே இந்த கிராமவாசி யிடம் சென்று உம் பாவம் மன்னிக்கப்பட்டு விட்டது. என்று கூறச் சொன்னார்கள்.

இந்தச் செய்தி மவ்லித், மத்ஹப் மற்றும் ஜியாரத்தை மறுக்கும் குழுவினரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட தப்ஸீர் இபுனு கதீரின் முதல் பாகத்திலேயே இடம் பெற்றிருக்கிறது.

நயனம் நனைந்திடும் இந்நிகழ்வின் மூலம் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் பாவங்களை மன்னிக்கக் கோருவது தவறல்ல என்பதும், அதன் மூலமாக அவர் பாவம் மன்னிக்கப்பட்ட உறுதியான தகவலும் வெளிவந்தது.

மேலும் غَفُرْ (மன்னிப்பவர்) என்றச் சொல் முக்காலத்தையும் குறிக்கும் மகத்தான சொல்லாகும். மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமக்கு தீங்கிழைத்தவர்களை மன்னித்தார்கள்.

தாயிப் பெருவெளியில் நடந்த கொடூர நிகழ்வு களையும், பிறந்த பதியிலே வாழவிடாமல் நெருக்கடி கொடுத்தவர் களையும் சிலவேறு சந்தர்ப்பங்களில் உயிருக்கே ஆபத்தை ஏற்படுத்த எத்தனித்தவர்களையும் கூட, மக்கா வெற்றியின் போது மன்னித்தார்கள்.

அந்த வகையிலே ஆய்வு செய்தாலும், எந்த வகையிலும் நபியே நீங்கள் மன்னிக்கும் மாண்பாளராக இருக்கிறீர் என்ற வாசகம் தவறாகாது.

الغفار என்ற சொல் அல்லாஹ்வின் திருநாமங்களில் உள்ளது.

எனவே அல்லாஹ்வுக்கு மட்டுமே சொந்தமான பெயரை அடியார்களில் யாருக்கும் சூட்டக் கூடாது என வாதிப்பார்களானால் அவர்களின் வாதம் எவ்வளவு பலவீனமானது என்பதை நிறைமறை குர்ஆன் நிரூபிக்கிறது. பாருங்கள்.

(அவர்களின் குற்றங்களை) மன்னித்தும், அவற்றை பொருட்படுத்தாமலும், சகித்துக் கொண்டும் இருப்பீர்களாயின் நிச்சயமாக அல்லாஹ் மன்னிப்பாளனாக இருக்கிறான். (அல்குர்ஆன் 65 : 14)

وَالَّذِيْنَ يَجْتَنِبُوْنَ كَبٰٓئِرَ الْاِثْمِ وَالْفَوَاحِشَ وَاِذَا مَا غَضِبُوْا هُمْ يَغْفِرُوْنَ

அவர்கள் கோபம் கொள்ளும்போது மன்னிப்பார்கள். (அல்குர்ஆன் 42 :37)

மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

مَنْ لَا يَغْفِرُ لَا يُغْفَرُ

யார் மன்னிக்கவில்லையோ அவர் மன்னிக்கப்படவும் மாட்டார் என்றார்கள். (முஸ்னது அஹ்மது 4 : 365)

மேற்கண்ட மறை மொழிகளிலும், மாநபியின் மணி மொழியிலும் மன்னித்தல் என்ற சொல் மனிதர்களுக்காக பிரயோகபடுத்தப்பட்டிருப்பதை கவனிக்கவும்.

அந்தச் சொல் அல்லாஹ்வுக்கு மட்டுமே உரியதெனில் அல்லாஹ்வின் கூற்றையும் அருமை நபிகளாரின் சொல்லையும் இவர்கள் மதிக்கவில்லை என்பது தானே உண்மை.

மேலும் இறைவசனத்தில்

مَنْ يُطِعِ الرَّسُوْلَ فَقَدْ اَطَاعَ اللّٰهَ

யார் ரசூலுக்கு வழிபட்டாரோ அவர் திட்டமாக அல்லாஹ்வுக்கே வழிபட்டவராகிறார் (அல்குர்ஆன் 4 : 80) என இறைவன் இயம்புகிறான்.

وَمَنْ يَّعْصِ اللّٰهَ وَرَسُوْلَهُ

எவன் அல்லாஹ்வுக்கும் ரசூலுக்கும் மாறு செய்கிறானோ (4 : 14)

இப்படி மாமறையில் மூன்று முறை முழங்குகிறான் இறைவன். இதன் மூலம் ரஸூலுக்கு வழிபடுவது அல்லாஹ் விற்கு வழிபட்டதாகவும் ரஸூலுக்கு மாறுபட்டவன் அல்லாஹ்விற்கு மாறுபட்டவனாகவும் திருமறை திட்டவட்ட மாகத் தீர்ப்பளிக்கிறது.

எனவே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் மன்னிக்க வேண்டுவது அல்லாஹ்விடமே மன்னிக்க வேண்டுவதாகி விடுகிறது.

மாநபியவர்கள் மன்னித்தால் அது மாபெரும் இறைவனே மன்னித்ததாகத்தான் பொருளாகும் என்பதை நிரூபிக்கும் நிகழ்வொன்றைத் தருகிறேன் பாருங்கள்.

அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள். நாங்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் இருந்தபோது ஒரு மனிதர் அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே நான் அழிந்து விட்டேன் என்றார்.

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், உமக்கு என்ன நேர்ந்தது என்று கேட்டார்கள். நான் நோன்பு வைத்துக் கொண்டு என் மனைவியுடன் கூடி விட்டேன் என்றார்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், உம்மிடம் விடுதலை செய்வதற்கு ஒரு அடிமை இருக்கிறாரா? என்று கேட்டார்கள் அவர் இல்லை என்றார்.

தொடர்ந்து இரண்டு மாதம் நோன்பு நோற்க உம்மிடம் சக்தி இருக்கிறதா? என்று கேட்டார்கள். அவர் இல்லை என்றார். அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க உம்மிடம் வழி இருக்கிறதா? என வினவினார்கள். இல்லையென்றே விடையளித்தார்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சற்று மவுனமாக இருந்தார்கள். நாங்கள் இவ்வாறு இருந்த போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

அவர்களிடம் பேரீச்சம்பழம் நிறைந்த அரக் எனும் அளவை கொண்டு வரப்பட்டது.

அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கேள்வி கேட்டவர் எங்கே? எனக் கேட்டார்கள் நான் தான் என்று அவர் கூறினார்.

இதைப் பெற்று தர்மம் செய்வீராக என்றார்கள். அப்போது அம்மனிதர் என்னை விட ஏழையாக இருப்போருக்கா (நான் தர்மம் செய்ய வேண்டும்) மதீனாவின் இருமலைகளுக்கு இடைப்பட்ட பகுதியில் என் குடும்பத்தாரைவிட பரம ஏழைகள் யாருமில்லை என்று கூறினார்.

அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது கடவாய்ப் பற்கள் தெரியும் படி சிரித்தார்கள். பிறகு இதை உம் குடும்பத்தாருக்கே உண்ணக் கொடுத்துவிடுவீராக என்றார்கள்.

(புகாரி ஷரீப் 1936)

நோன்பு வைத்துக் கொண்டு தடுக்கப்பட்ட ஒன்றை செய்துவிட்ட அம்மனிதருக்கு அவர் குற்றத்திற்கு பகரமாக அவர் குடும்பத்தினரையே பேரிச்சம் பழங்களை உண்ணச் செய்து பரிகாரமாக மாற்றி விட்டார்களே இதை நினைக்கும் போது நமக்கும் சிரிப்புத்தானே வருகிறது.

இல்லை இல்லை உன்னை அல்லாஹ் மன்னிக்க மாட்டான் என்று கூறவில்லையே மாறாக மாநபியவர்களே மன்னித்ததைத்தானே இனிக்கும் இந்நிகழ்வு மூலம் அறியமுடிகிறது.

وَمَن يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا اللَّهُ

அல்லாஹ்வைத் தவிர வேறு யார் பாவங்களை மன்னிப்பார். (அல்குர்ஆன் 3 : 134) என்று அல்லாஹ்வே கேட்கிறான். எனவே அல்லாஹ்வையன்றி வேறு எவராலும் மன்னிக்க முடியாது என்பதே அவர்களது வாதமாயிருப்பின் அல்லாஹ்வே கூறும் கீழ்கண்ட வசனத்தின் நிலை என்ன?

وَالْعَافِينَ عَنِ النَّاسِ

இன்னும் ஜனங்களை மன்னித்து விடுகிறவர்கள் (ஆலஇிம்ரான் 133)

இவ்வசனம் மனிதர்களைக் குறித்துத் தானே கூறப்பட்டிருக்கிறது. மேலும் மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள்.

صِلْ مَنْ قَطَعَكَ، وَاعْفُ عَنْ مَنْ ظَلَمَكَ
وَأَحْسِنْ إِلَىٰ مَنْ أَسَاءَ إِلَيْكَ

உன்னை வெட்டிய (பகைத்த) வரை நீ ஒட்டிநட, உனக்கு அநீதி யிழைத்தவரை மன்னித்துவிடு, உனக்கு தீங்கிழைத்த வனுக்கு நீ நன்மை செய்.

மேற்கண்ட பொன்மொழியில் மன்னித்துவிடு என்ற வார்த்தை மலக்குகளைப் பார்த்தா கூறப்பட்டிருக்கிறது? மனிதர்களைப் பார்த்துதானே?

உண்மை இவ்வாறிருக்க எவ்வளவு சிந்தனை களிலேயே நல்ல ஆதாரங்களை எடுத்துக் கூறினாலும் கள்ள ஆதாரங் களையே மோகம் கொள்ளும் இவர்களின் வாதம் எப்படி உண்மையாகும். கவிதைகளே கூடாது. எனவே மவ்லித்களே கூடாது என தீர்ப்பளித்துவிட்ட இவர்களின் பார்வைக்கு எப்படி நல்லது தெரியும்?

பிரியப் பார்வையுடன் பார்க்க வேண்டாம் நீதப்பார்வை யுடனாவது பார்த்திருக்கலாம் அல்லவா?

? குற்றச்சாட்டு

وَمَرِيْضًا اَنْتَ عَائِدُهُ - قَدْ اَتَاهُ اللّٰهُ بِالْفَرَجِ

தாங்கள் நலம் விசாரிக்கச் சென்ற நோயாளிக்கு அல்லாஹ் ஆனந்தத்தை கொண்டு வந்தான்.

நோயை சுகமாக்குவது இறைவனல்லவா நபியவர்கள் சென்றாலே குணமாகிவிடுமா? அப்படியெனில் அவர்களே

நோயுற்றிருந்தார்களே, அவரது தோழர்கள், துணைவியர்கள், மக்கள் இப்படி எத்தனையோ பேர் நோயுற்றிருந்தனரே அவர்களால் சுகமாக்க முடிந்ததா?

### விளக்கம்

ஒரு கருத்தை சொல்வதற்கு ஆயிரம் முறை யோசிக்க வேண்டும் என்றால், பிறரின் கருத்தை குறை சொல்வதற்கு இரண்டாயிரம் முறை யோசிக்க வேண்டும். அதுவும் மேன்மக்களான இறைநேசர்களால் இயம்பப்பட்ட சொற்களை குறை கூற, வாழ்க்கை முழுவதும் யோசிக்க வேண்டும். அல்லது அப்படிக் குறை கூறுவதற்கு கற்பனையால் கூட நினைக்கக் கூடாது.

இதில் எதைப் பற்றியுமே சிந்திக்காது பள்ளி வகுப்பில் பிள்ளைகள் சண்டையிட்டு சம்பந்தமில்லாமல் பேசுவது போல், குறைகூற வேண்டுமே என்ற எண்ணத்தில் திரிக்கப்பட்ட இவ்வாசகம் எவ்வாறு தவறானது என்பதைப் பாருங்கள்.

அனஸ் ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள் யஹூதிகளிலுள்ள ஒரு சிறுவன் சுகவீனமாக இருந்தான் அவனை நலம் விசாரிக்க நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வந்தார்கள். தலைப்பகுதியில் அமர்ந்து கொண்டு முஸ்லிமாகு

என்றார்கள். அவன் தன் தலைப்பகுதியில் இருந்த தன் தந்தையைப் பார்த்தான். அவர் அபுல் காஸிமுக்கு வழிப்படு என்றார். அந்தச் சிறுவன் முஸ்லிமாகி விட்டான்.

நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எழுந்தார்கள்.

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ اَنْقَذَهٗ بِيْ مِنَ النَّارِ

என்னைக் கொண்டு இவனுக்கு நரகத்தை விட்டும் ஈடேற்றமாக்கிய இறைவனுக்கே புகழனைத்தும் என்றார்கள். (அபூதாவூத்)

வீடு தேடிச் சென்று சுகம் விசாரித்து, அச்சிறுவனின் குப்ரியத் எனும் இறை நிராகரிப்புத் தன்மையை நீக்கிய நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை பாவங்களை அழிக்கக் கூடியவர் என்று கூறுவது எப்படித் தவறாகும்

## பார்வைபெற

உதுமான் பின் ஹுனைப் ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள். நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருத்தலத்தில் ஒரு அந்தகர் (பார்வையற்றவர்) வந்தார்.

நாயகமே ! என்னை அழைத்துச் செல்வதற்கு யாரும் இல்லை. எனக்கு மிகவும் சிரமமாக இருக்கிறது என்றார்.

நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவரை நோக்கி நீர் வுளூ செய்து, இரு ரக்அத்துகள் தொழுது விட்டு (பின்வருமாறு துஆச் செய்யுங்கள்) பின்பு

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ وَاَتَوَجَّهُ اِلَيْكَ بِنَبِيِّكَ مُحَمَّدٍ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ نَبِيِّ الرَّحْمَةِ يَا مُحَمَّدُ اَتَوَجَّهُ بِكَ اِلٰى رَبِّكَ فَيُجْلِيْ عَنْ بَصَرِيْ اَللّٰهُمَّ شَفِّعْهُ فِيَّ وَشَفِّعْنِيْ فِيْ نَفْسِيْ

யா அல்லாஹ் ! அருள் பெற்ற நபியான உன்னுடைய நபி அவர்களைக் கொண்டு உன்னின் பால் முன்னோக்கிய வனாக உன்னிடத்திலே நான் கேட்கின்றேன்.

முஹம்மது நபியே ! உங்களைக் கொண்டு உங்கள் இரட்சகனை நான் முன்னோக்குகின்றேன். என்னுடைய பார்வையை எனக்குத் திருப்பித் தாருங்கள். அல்லாஹ்வே ! அவர்களை எனக்கு பரிந்துரை (ஷபாஅத்) செய்யச் செய்வாயாக. நபியே ! எனக்கு ஷபாஅத் செய்வீர்களாக என்று ஓதுமாறு சொன்னார்கள்.

உதுமான்பின் ஹுனைப் ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக நாங்கள் (எழுந்து) பிரிந்திடவும் இல்லை. அதிக நேரம் பேசிக் கொண்டிருக்கவும் இல்லை. அதற்கிடையில் அதே மனிதர் வருகிறார் அவரிடத்தில் பார்வையற்றிருந்த எந்த

அடையாளமும் இல்லை. (முழுமையான பார்வை பெற்றிருந்தார்) (திர்மிதி)

இப்பொழுது சொல்லுங்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் வந்த அந்தகர் பார்வை பெற்றாரா? இல்லையா? பார்வையை பெற்றது அவருக்கு மகிழ்ச்சித்தானே? அதைத்தான் மௌலிதில் கூறப்பட்டிருக்கிறது.

## மயக்கம் நீக்கும் மருந்து

عَنْ مُحَمَّدِ بْنِ الْمُنْكَدِرِ قَالَ سَمِعْتُ جَابِرًا يَقُولُ جَاءَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَعُودُنِي وَأَنَا مَرِيضٌ لَا أَعْقِلُ. فَتَوَضَّأَ وَصَبَّ عَلَيَّ مِنْ وَضُوئِهِ فَعَقَلْتُ

ஜாபிர் ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள். நான் நோயுற்றிருந்த போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்னை நோய் விசாரிக்க வந்தார்கள். நான் மயக்கமான நிலையில் இருந்தேன். அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வுளு செய்துவிட்டு அந்தத் தண்ணீரை என்மீது தெளித்தார்கள். உடனே நான் மயக்கத்திலிருந்து (தெளிந்து) உணர்வு பெற்றேன். (புகாரி ஷரீப் 194)

மயக்கத்திலிருந்த என் மீது நபியவர்கள் வுளு செய்த தண்ணீர் பட்டபோது என் மயக்கம் தெளிந்தது என்ற

ஜாபிர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் வார்த்தையின் ஆழத்தை கவனத்தில் கொண்டால், கேள்விகள் நிச்சயம் எழாது.

மயக்கத்திலே இருக்கிற தமதருமைத் தோழருக்கு தக்க மருந்து இதுதான் என்று அகில உலகிற்கு அறிவிக்கும் முகமாக வுளு செய்த தண்ணீரை (உத்தம நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்) தெளித்தார்களே ! அது ஆதாரமாக தெரியவில்லையா?

? குற்றச்சாட்டு

اَقْسَمْتُ فِيْ نَصْرِيْ بِكُمْ عَلَيْكُمْ

நபியே ! தங்களைக் கொண்டு யான் உதவி பெறுவதில் தங்களின் மீது சத்தியம் செய்கிறேன்.

இதில் அவர்கள் கண்ட குறை

1. நபி மீது சத்தியமிட்டிருக்கிறார். இது கூடாது.

2. நபியின் மீது சத்தியமிட்டு அவர்களிடமே உதவி கேட்கிறார்.

3. ஒருவர் நான் தருகிறேன் என்று சத்தியம் செய்யலாம். ஆனால் உன் மீது சத்தியமாக நீ எனக்கு தர வேண்டும் என்று சொல்லலாமா?

உ விளக்கம்

அறிவு சார்ந்த வினாவைக் கேட்டுவிட்டதாக அவர்கள் மட்டுமே பெருமை பட்டுக் கொள்ளலாம். ஆனால் அவர்களின் கேள்வி வெறும் கேலிக்குரியதே என்பதை பின் வரும் தகவல்கள் நிரூப்பிப்பதை பாரீர்.

ஹழ்ரத் அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் குளிப்பு (கடமையாக) உள்ள நிலையில் (பகலுக்கு முன்) குளிக்காமல் நோன்பு நோற்கக் கூடாது. என்ற தகவலைக் கூறிக் கொண்டிருந்தார்கள். அக்கால அரசர் மர்வான், அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து, அபூ அப்திர்ரஹ்மானே உம்மீது ஆணையிட்டுக் கூறுகிறேன். நீர் ஆயிஷா, உம்மு ஸலமாவிடம் போய் இந்தச் சட்டத்தைக் கேட்டு வரவேண்டும் என்றார்கள்.

இங்கு மர்வான் யாரின் மீது சத்திய மிட்டாரோ அதே அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அவர்களைக் கேட்டு வருமாறு சொன்னாரே அதையும் தவறு என வாதிப்பார்களோ?

ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் மீது கூறப் பட்ட அவதூறு அவர்களின் காதுக்கு எட்டியபோது தன் பெற்றோர் வீட்டிற்கு வந்து அழுது கொண்டிருந்தார்கள்.

வீட்டுப்பரணில் குர்ஆன் ஓதிக்கொண்டிருந்த அபூபக்கர் சித்தீக் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தம் மகளின் அழுகை சப்தம் கேட்டு, கீழே வந்து தம் மனைவியிடம் காரணம் கேட்டார்கள்.

ஆயிஷா, தன்னைப்பற்றி பேசப்படுகிற அவதூறுச் செய்தியை செவியுற்றதால் அழுகிறார் என்றார்கள்.

உடனே கண்ணீர் வடித்தவாறு அபூபக்கர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள், உன் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன் நபியின் வீட்டுக்குப் போ என்றார்கள். (புகாரி, முஸ்லிம்–திர்மீதி)

யாருடைய ஈமான், உலகில் யாவருடைய ஈமானை விடவும் பலமானதோ, அந்த அமீருல் முஃமினீன் அபூபக்கர் ஸித்தீக் ரழியல்லாஹு அன்ஹு அவர்களே தன் மகள் மீது சத்தியமிட்டு பேசுகிறார்களே அதன் மூலம் அல்லாஹ் அல்லாததன் மூலம் சத்தியம் செய்வதும், சத்தியம் செய்தவர்களிடமே ஒரு காரியத்தை ஏவுவதும் தவறல்ல என்ற தகவல் தெளிவு பெறுகிறது.

மேலும் இவர்களின் பிதற்றல் நாடகங்களும் அம்பலமடைகின்றதல்லவா?

ஆயிருர் பெருமானின் அன்பு பாட்டனார் அப்துல் முத்தலிபு ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பூமான்

நபியவர்கள் பிறந்த நேரத்தில் குழந்தையை கையிலே வைத்துக் கொண்டு தாலாட்டு பாடினார்கள் அதில்,

أَنْتَ الَّذِي سُمِّيتَ فِي الْقُرْآنِ

(பேரரே) உம் புகழ் மிகு நாமம் உயர் மறை குர்ஆனிலே உரைக்கப்பட்டிருக்கிறது என்று பாடினார்கள்.

**? குற்றச்சாட்டு**

இந்த வரிகள் அவர்கள் இதயத்தைக் கிழித்திருக்கிறது. குர்ஆன் என்பதே நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் 40ம் வயதிற்கு பின் தானே வந்தது. பிறந்த நேரத்திலேயே அப்துல் முத்தலிப் அவர்களுக்கு குழந்தையின் பெயர் குர்ஆனில் கூறப்பட்டது எப்படித் தெரியும்.

**விளக்கம்**

நம்முடைய முன்னோர்களான இமாம்கள் இது போன்ற காவியங்களில், தங்களின் அறிவு தீட்சண்யத்தை நிரூபிப்பது மட்டுமின்றி, இதை புரிந்து கொண்டவர்களின் அறிவிற்கும் புரியாமல் எதிர்வாதம் செய்வோரின் சிந்தனை தடுமாற்றத்திற்கும் சிறந்த அளவுகோலாக இது போன்ற கவியாக்கங்களை புனைந்திருக்கின்றார்கள்.

என்னே அவர்களின் அறிவு சாதுர்யம் ! அல்லாஹ் அவர்களின் மறைவிடங்களை ஒளிவாக்கி அவர்களின் பொருட்டால் நம் நெஞ்சங்களையும் விசாலப்படுத்து வானாக ஆமீன்.

عَنْ اَبِيْ هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ عَنِ النَّبِيِّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ خُفِّفَ عَلٰى دَاوُدَ عَلَيْهِ السَّلَامُ الْقُرْاٰنُ. فَكَانَ يَأْمُرُ بِدَوَابِّهِ فَتُسْرَجُ فَيَقْرَأُ الْقُرْاٰنَ قَبْلَ اَنْ تُسْرَجَ دَوَابُّهُ وَلَا يَاْكُلُ اِلَّا مِنْ عَمَلِ يَدِهِ

அபூஹுரைரா ரழியல்லாஹு அவர்கள் அறிவிக்கிறார் கள். நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நவின்றார்கள்.

நபி தாவுத் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு குர்ஆன் ஓதுவது இலேசாக்கப்பட்டிருந்தது. தம் வாகனத்தை தயார் செய்யும்படி உத்தரவிடுவார்கள்.

உடனே அதற்கு சேணம் பூட்டப்படும். வாகனத்திற்கு சேணம் பூட்டப்படுவதற்கு முன்பே குர்ஆனை ஓதி விடுவார்கள். தன் கையினால் உழைத்துத்தான் உண்ணுவார்கள். (புகாரி ஷரீப் 3417)

மேற்கூறப்பட்ட ஹதீஸை மீண்டும் ஒருமுறைப் படியுங்கள் நபி தாவூத் அலைஹிவஸ்ஸலாம் அவர்கள்

குர்ஆன் ஓதுவார்கள் என்று இரண்டு முறை இடம் பெற்றதை கவனித்தீர்களா?

நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்தானே இறுதி நபி. அந்த இறுதி நபியின் வாழ்வில் வழங்கப்பட்ட குர்ஆனை முந்தி வந்த தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஓதியது எப்படி என்று சந்தேகம் எழுகிறதல்லவா?

குர்ஆன் என்ற பெயர் முந்திய வேதங்களான தவ்ராத், ஜபூர், இன்ஜீல் ஆகிய இந்த வேதங்களுக்கும் இருந்தது.

குர்ஆன் என்றால் ஓதப்படுவது என்பதுதான் பொருள் முந்திய காலங்களில் ஓதப்பட்ட வேதங்களுக்கும் குர்ஆன் என்று பெயர் இருந்தது.

அத்தகைய முந்திய வேதங்களான குர்ஆனில் உங்கள் பெயர் இடம் பெற்றிருந்தது, என்பதே அப்துல் முத்தலிப் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கவிதையின் கருவாகும்.

எந்த ஒரு அறிவும் அறியாதது தவறல்ல, ஆனால் அறியாமலேயே இருப்பதுதான் தவறு. தனக்கு தெரியாது என்பதையாவது தெரிந்திருக்க வேண்டுமில்லையா? அதைக்கூடத் தெரியாமல் விமர்சனம் செய்வதும் வேடிக்கை யாக பேசுவதும் அறிவுத்துறையின் விபரீதமல்லவா?

எதற்கெடுத்தாலும் புகாரியில் இருக்கிறதா? என ஆதாரம் கேட்கும் இவர்கள் புகாரியிலேயே இடம் பெற்ற இந்தச் செய்தியை அறியாதது ஏன்?

அல்லது அறிந்தும் தம் கருத்துக்கு முரண் படுவதால் கை விட்டு விட்டார்களோ என்னவோ?

புகாரியிலிருந்தே கூறப்பட்டிருக்கும் இது போன்ற விடைகளுக்கு என்ன மழுப்பல் சொல்லப் போகிறார்களோ அல்லாஹுவ ரசூலுஹு அஃலம்

مَازَالَ نُوْرُ مُحَمَّدٍ مُتَنَقِّلاً ۝ فِي الطَّيِّبِيْنَ طَاهِرِيْنَ ذَوِي الْعُلَا
حَتّٰى لِعَبْدِ اللّٰهِ جَاءَ مُطَهَّرًا ۝ وَبِوَجْهِ اٰمِنَةٍ بَدَا مُتَهَلِّلَا

முத்தான முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஜோதி அகமும், புறமும் தூயவர்களான உயர்ந்தவர்களிடயே மாறி மாறி இடம் பெற்று வந்து முடிவில் அப்துல்லாஹ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் வரை வந்து சேர்ந்தது. அதன் பின் ஆமினா ரழியல்லாஹு அன்ஹா அவர்களின் வதனத்தில் பிரகாசமாக வந்தது.

இது வரையில் மௌலிதின் சில பைத்களிலிருந்து ஓரிரு வரிகளை மட்டுமே வசைபாடிய வகுப்பினர் இந்த சிறிய சீரிய பைத்தை முழுவதுமே குறையானது என தன் குறை பிரசவ வாதத்தை ஏடுகளில் பிரசவித்துள்ளனர். (பிரசுரித்துள்ளனர்)

அகமும், புறமும் தூய்மையானவர்கள் என்பது தாஹா நபியின் தலைமுறையினர் யாவரும் நேர்வழி நின்றவர்கள் என்பதாகும்.

? குற்றச்சாட்டு

ஆனால் அதில் இவர்களுக்கு அஜீரணம் ஏற்படுகிறது. நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இப்ராஹிம் நபியின் பரம்பரையில் தோன்றியவர்கள் இப்ராஹிம் நபியின் தந்தை ஆஜர் என்பவராவர். நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஜோதி ஆஸரிடமிருந்து தான் இப்ராஹிம் நபிக்கும் இடம் பெயர்ந்திருக்க முடியும் அந்த ஆஸரே இறை நிராகரிப்பாளர்தானே அப்படியிருக்க மாநபியின் தலை முறையினர் யாவரும் நேர்வழி பெற்றவர்கள் என்பது தவறல்லவா? என்பது அவர்களின் (கு) தர்க்கம்.

ஹ விளக்கம்

இவர்கள் இப்பொழுது நேரடியாக குர்ஆனோடு மோதுவதை பாருங்கள்.

وَتَقَلُّبَكَ فِى السَّاجِدِيْنَ

இன்னும் அவன் உம்மை இறைவனுக்கு சிரம் பணிந்தவர்களிலேயே புரட்டிக் கொண்டு வந்தான். (அஷ்ஷுஅரா)

ஆதி நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் முதல்

அருமை நபியின் பெற்றோர் அப்துல்லாஹ், ஆமினா (ரழியல்லாஹு அன்ஹுமா) ஆகியோர் வரை யாவருமே இறைவனுக்கு ஸஜ்தா செய்தவர்களேயாகும்.

مِنْ اَصْلَابِ الْكَرِيْمَةِ الْفَاخِرَةِ اِلَى الْاَرْحَامِ الزَّكِيَّةِ الطَّاهِرَةِ

மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நூர் எனும் பேரொளி சங்கையான ஆண்களின் முதுகந்தண்டிலும், தூய்மையான, களங்கமற்ற பெண்கள் கருவறைகளிலுமே நகர்த்திக் கொண்டு வரப்பட்டது.

இத்தகவல் தப்ஸீர் ஸாவியிலும் இன்னும் சில தப்ஸீர்களிலும் இடம் பெற்றதாகும்.

இதே வார்த்தை அப்படியே சுபுஹான மௌலிதின் நான்காம் ஹிகாயத்திலும் இடம் பெற்றிருக்கிறது.

அதே தப்ஸீர் ஸாவியில் இப்ராஹிம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தந்தையின் பெயர் تَارَخْ தாரஃக் என்றும் ஆஜர் என்பது தந்தையுடன் பிறந்தவர் என்றும் தெளிவாக தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

அரபியின் இஸ்திலாஹ் எனும் புழக்கப்பாஷையில் தந்தை, தந்தைவழிபாட்டன், தந்தையுடன் பிறந்த சாச்சா, பெரியத்தா யாவருக்குமே (அபூ) தந்தை என்ற சொல் பிரயோகிக்கப்படும்.

அது போன்றே மகன், மகன் வழிப்பேரன் யாவருக்கும் இபுனு என்று பிரயோகிக்கப்படும் எனவேதான் ஹுனைன் யுத்த களத்தில் நபியவர்கள்

اَنَا النَّبِيُّ لَا كَذِبْ ۞ اَنَا ابْنُ عَبْدِ الْمُطَّلِبْ

நான் நபி நான் பொய் சொல்பவனல்லன் நான் அப்துல் முத்தலிபின் குமாரராக இருக்கிறேன் என்றார்கள்.

அப்துல் முத்தலிபின் பேரர் என்பதற்கு (இபுனு) என்ற சொல்லையே செம்மல் நபியவர்கள் உபயோகித்திருக்கிறார்கள் என்பதன் மூலம் இவர்கள் எடுத்து வைத்த வாதம் வலுவிழந்து விடுகிறது.

இப்படி குர்ஆனுடனேயே நேரடியாக மோதுவதில் கை தேர்ந்த இவர்களின் புளுகு பிரச்சாரத்தின் ஒரு துளியே இது. அவர்களின் முன்னுக்குப்பின் முரண்பட்ட வகையில் அமைந்த தகவல்களை திரட்டினாலே அதுவே ஒரு பெரும் நூலாகிவிடும்.

ஆனால் தற்போது அந்தவேலை நமக்கில்லாமல் அவர்களிலேயே பிரிந்து போன, பிரிந்து போய் கொண்டிருக்கிற முன்னால் நண்பர்களே(?) அவைகளை பிரச்சாரம் மூலமாகவும், பிரசுரம் மூலமாகவும் அளித்து வருகின்றனர் ?

அவர்களின் பொய் பிரச்சாரத்திற்கு அளித்து வந்த ஆதரவை வாபஸ் பெற்று வருகின்றனர் என்பது நாடறிந்த உண்மை.

தெளிந்த நீரோடை போன்ற இஸ்லாத்தில், குட்டையைக் குழப்பி, குழம்பிய குட்டையில் ஆதாயம் தேட நினைக்கும் வஹ்ஹாபிகளின் குபாட நாடகம் எத்தனை நாளைக்குத்தான் அரங்கேறும் அவர்களின் கூடாரங்கள் கலைந்தே தீரும். சுன்னத் வல் ஜமாஅத்தின் சுகந்த கொடி என்றும் போல் பறந்துக் கொண்டே இருக்கும்.

## வள்ளல் நபியின் வாசலை முத்தமிடுவோம்

ضَاقَتْ بِيَ الْأَسْبَابُ ۞ فَجِئْتُ هٰذَا الْبَابُ
أُقَبِّلُ الْأَعْتَابُ ۞ أَبْغِيْ رِضَا الْأَحْبَابِ
وَالسَّادَةِ الْأَخْيَارِ

என் காரண காரியங்கள் நெருக்கடியாகி விட்டது. எனவே நபியே தங்கள் இந்த வாசலுக்கு நான் வந்து விட்டேன். தங்களின் வாசலின் இந்த படிகளை முத்தமிடுகிறேன். நேசர்கள், நல்லவர்கள், தலைவர்கள் யாவரின் பொருத்தத்தையும் தேடுகிறேன்.

மனித வாழ்வில் நெருடல்களையும், நெருக்கடி களையும் நீக்கி நிம்மதியையும், இதய அமைதியையும் தருவது நம் இதயத்து வேந்தர் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களல்லவா?

எனவே தான் ஏந்தல் நபியின் இனிய பெயரைச் சொல்லும் போது உள்ளம் உவகை பெறுகிறது. பெருமானின் பெயரிலேயே இன்பம் அமைந்திருப்பதை சுவைத்து சுகித்த மோன நாதர்களை கேட்டாலல்லவா அதன் சுகமும் சுவையும் தெரியும்.

அதை விட்டு விட்டு மாநபியின் படியை முத்தமிடலாமா ஏந்தல் நபியின் கப்ரை முத்தமிடலாமா என்று முணங்கிக் கொண்டிருக்கின்றனர்.

பாசநபியின் உமிழ் நீரானாலும், உதிரமானாலும், வியர்வையானாலும் இயற்கை உபாதைகளானாலும் அவை அனைத்துமே சுத்தமானதே என்ற சுகந்த கொள்கையை கொண்ட நமக்கு வள்ளல் நபியின் வாசல் படிகளையல்ல மிதியடிகளை முத்தமிடுவதானாலும் கூட பாக்கியம் கிடைத்தால் தானே முடியும்?

அருமை நாயகத்தின் பெருமை மிகு தோழர் (ஸாஹிபுல் வரஃ) பேணுதல் மிக்கவர் என போற்றப்பட்ட, ஹழ்ரத் அப்துல்லாஹ் இபுனு உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பாச நபியின் பாதம் பட்ட மிம்பரை தொட்டுமுத்தமிடுவார் கள் என்ற செய்தி இபுனு ஸஃது என்ற நூலில் இடம் பெற்றிருக்கிறது.

ஹழ்ரத் அபூஅய்யூப் அல் அன்சாரி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பூமான் நபியின் புனித கப்ரில் தன் முகத் தை பதித்து முத்தமிடுகிறார்கள்.

அதைப் பார்த்த மன்னர் மர்வான் அபூ அய்யூபே என்ன செய்கிறீர் என ஏளனமாகக் கேட்ட போது அருமை ஸஹாபி யவர்கள் அளித்த அழகு பதிலை பாருங்கள்.

நான் கல்லையோ மண்ணையோ முத்தமிடவில்லை என் நெஞ்சத்தின் நேசர் ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கப்ரைத்தான் முத்தமிடுகிறேன் என்றார்கள் (நூல் : முஸ்னது இமாம் அஹ்மது)

பாச நபியின் பூ உடலை தாங்கிய மதீனத்து மண்ணை தன் கண்களுக்கு சுருமாவாகத் தீட்டி சுகந்தம் பெறும் ஆஷீ கீன்களான நாயகக் காதலர்களின் காலடியே தஞ்சம் எனக் கிடக்கும் நம்மிடம் வந்து பூமான் நபியின் படிகளை முத்தமிடுவது அபத்தம் என்றால், அந்த வாதங்களெல்லாம் புறந்தல்லப் படவேண்டியதேயன்றி ஏறெடுத்துப் பார்த்து பதில் பேசப் படவேண்டியதில்லை.

## மஹான்களின் மௌலித் ஷரீப்

மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது மௌலித் ஓதுவதையே மறு கண் கொண்டு காணும் இவர்கள் மஹான்களின் மவ்லிதை மட்டும் ஏற்றுக் கொள்வார்களா என்ன?

அவர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும் என எதிர்பார்ப்பதும் தவறுதான். ஆனாலும் நம்மின் கவனத்திற்காக சில சிந்தைநிறை தகவல்களை முன் வைக்கிறோம்.

ருபைய்யிவு பின்த் முஅவ்வித் ரழியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள்.

எனக்கு திருமணம் நடந்த அன்று காலை நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னிடம் வந்தார்கள். (இந்த ஹதீஸை கேட்டுக் கொண்டிருந்த காலித் பின் தக்வான் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களிடம்) எனக்கருகில் நீங்கள் அமர்ந்திருப்பது போல நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், எனது விரிப்பின் மீது அமர்ந்தார்கள். (என்று ருபய்யிவு கூறினார்கள்) அங்கு சில முஸ்லிம் சிறுமிகள் (தப்) கஞ்சிராக்களை அடித்துக் கொண்டு பத்ருப் போரில் ஷஹீதாக்கப்பட்ட முன்னோர்களைப் புகழ்ந்து இரங்கல் பாடிக் கொண்டிருந்தனர்.

அவர்களில் ஒரு சிறுமி, எங்களிடையே ஒரு இறைத் தூதர் இருக்கிறார். அவர் * நாளை நடக்கவிருப்பதையும் அறிவார் என்று கூறினாள். உடனே நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அப்படிச் சொல்லாதே. முன்பு நீ சொல்லிக் கொண்டிருந்ததை சொல் என்றார்கள். (புகாரி ஷரீப் 4001)

மேற்கூறப்பட்ட ஹதீஸின் மூலம் மறைந்துவிட்ட முன்னோர்கள் மீது புகழ்மாலை, இரங்கற்பா பாடுவது கூடும் என்பது உறுதியாகிறது.

மறைந்து விட்ட முன்னோர்கள் மீது புகழ் மாலை பாடுவது கூடாது எனில் மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அந்த இடத்தில் தடுத்திருப்பார்கள்.

தடுக்கவில்லை என்ற தகவலை விட அதை படிக்குமாறு அந்த சிறுமியருக்கு கட்டளையிடவும்

---

குறிப்பு : நாளை நடப்பதை இன்றே அறிவார்கள் என்பதை மறுக்கும் கூட்டத்தினர் இந்த ஹதீஸை ஆதாரமாக கூறி திரிகின்றனர். ஆனால் நாளை என்றால் அடுத்து வரும் நாளை மட்டுமல்ல தொடுத்து வரும் நாளை மஹ்ஷரில் நடப்பதையும் கூட மாநபியவர்கள் நன்கறிவார்கள் என்பதை நிரூபிக்க பல ஆதாரத் தகவல்கள் உண்டு எனினும் இந்நூலின் பக்கமிகைப்பை பயந்து விடு கிறோம். இன்ஷா அல்லாஹ் மாநபியின் மறைமுக ஞானத்தை மகுட மாகக் கொண்டு நூல் வெளியிடும் எண்ணம் உள்ளது. அல்லாஹ் அருள் புரிவானாக ஆமீன்.

செய்தார்கள். என்ற தகவலை அடிப்படையாகக் கொண்டே இறைநேசர்கள் அவ்லியாக்கள் மீது மவ்லித், மர்தியாக்கள் பாடப்படுகிறது.

இந்த ஹதீஸில் தன்னைப் பற்றி பாடியதை பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் நிறுத்தியது புகழ் பாடுவதை தடுப்பதற்காக அல்ல.மாறாக மறைந்து விட்ட தம் தோழர்களின் புகழ்மாலைகளை கேட்பதற்கேயாகும்.

மாநபியின் புகழ் பாடுவதற்குத்தான் ஏராளமான ஆதாரங்கள் இருக்கின்றனவே. இந்த ஹதீஸ் முன்னோர்களின் புகழ் பாடுவதை அங்கீகரிப்பதற்கான ஆதாரமாகும்.

மஹான்களின் புகழைப் பாடச் சொல்லும் போது மாநபியின் புகழ்பாடுவது மட்டும் எப்படி தவறாகும்.

## வாழும் வலிமார்கள் மீது

மஸ்ரூக் பின் அஜ்தவு ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறியதாவது

ஒரு முறை நாங்கள் ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்களிடம் சென்றோம். அப்போது அவர்களுக்கருகில் (புலவர்) ஹஸ்ஸான் பின் தாபித் ரழியல்லாஹு அன்ஹு

அவர்கள் அமர்ந்து அன்னையை புகழ்ந்து பாராட்டி தம் கவிகளால் பாடிக் கொண்டிருந்தார்கள்.

حَصَانٌ رَزَانٌ مَا تُزَنُّ بِرِيْبَةٍ
وَتُصْبِحُ غَرْثَى مِنْ لُحُوْمِ الْغَوَافِلِ

கற்பொழுக்கம் மிக்கவர்கள், கண்ணியம் நிறைந்தவர்கள் எந்த சந்தேகத்தின் பேரிலும் குற்றம் சாற்றப்பட இயலாதவர்கள் (புறமும், அவதூறும் பேசுவதன் மூலம்) அப்பாவிப் பெண்களின் மாமிசங்களை புசித்துவிடாமல் பட்டினியோடு காலையில் எழுபவர்கள் என்று பாடினார்கள். (புகாரி ஷரீப்)

இந்த ஹதீஸின் மூலம் இறை அனுக்கிரஹத்தைப் பெற்ற இறை அடியார்களான மேன்மக்களைப் போற்றி அவர்கள் முன்னிலேயே பாடலாம் என்பதைப் புரிய முடிகிறது.

ஒரு வேளை ஆயிஷா நாயகி அவர்கள் அப்பாடலை தடுத்திருந்தால் அப்படி பாடுவது ஆகாது என யூகித்திருக்க முடியும்.

ஆனால் மாநபியின் மனைவியாகவும், ஹதீஸ் அறிவிப்பாளர்களின் முன்னணியினர்களில் ஒருவராக

வும், சிறந்த சிந்தனை வாதியாகவும் திகழ்ந்த ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் இப்பாடலை அங்கீகரித்ததன் மூலம் தகுதி மிக்கவர்களை அவசியம் புகழ்ந்தே ஆக வேண்டும் அதை கவியாக பாடுவது கூட வரவேற்கத் தக்கதே என்பதை எளிதில் தெரிய முடிகிறது.

## மங்களம் - அமங்களம்

**? குற்றச்சாட்டு**

திருமணம் போன்ற சுபகாரியங்களில் மௌலிது ஓதப் படுகிறது, மரணம் போன்ற அமங்கல துயர நிகழ்வுகளில் குர்ஆன் ஓதப்படுகிறது.

மங்கலத்திற்கு மவ்லிதும் அமங்கலத்திற்கு குர்ஆனுமா என்பது அவர்களின் குருட்டு வாதம்

**விளக்கம்**

நமது பன்னெடுங்காலமாக பாதுகாக்கப்பட்டு வந்த பண்பாட்டு மரபின் படி திருமண வீடுகளில் மண ஒப்பந்தம் பேசப்பட்ட உடனேயே பாத்திஹா ஓதும் வழமை மரபில் இருந்து வருகிறது. பாத்திஹாவும் குர்ஆனை சார்ந்தது தானே அது போன்றே மரணம் நிகழ்ந்த வீடுகளிலும் மௌலிது ஓதப்பட்டு வருவதும் சென்னை போன்ற நகரங்களில் வழமையாகவே நடைமுறையில் இருந்து வருகிறது.

அதை புரியாமல் பேசுவது அறிவின் தளர்ச்சியை நிதர்சனப்படுத்துகிறது.

உங்களில் மரணித்தவர்களுக்கு சூரா யாசீனை ஓதுங்கள்.

ஹழ்ரத் அப்துல்லாஹ் இபுனு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறர்கள். ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் அன்சாரிகளிலிருந்து தன் உறவுப் பெண்ணுக்கு மணமுடித்து வைத்தார்கள்.

அங்கே சமூகமளித்த நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மணப்பெண்ணுடன் வாலிப பெண்களை அனுப்பினீர்களா? என வினவினார்கள். ஆம் என பதிலளிக்கப்பட்டது.

பாடல் பாடுபவர்களை அனுப்பினீர்களா என்று கேட்டார்கள்? இல்லை என பதிலளிக்கப்பட்டது.

கஜ்ல் எனும் பாடல்பாடும் குழுவினர் அன்சாரிகளில் உண்டே *"அதைனாகும்- அதைனாகும்-பஹய்யானா- வஹய்யாகும்"* என்று பாடும் அக்குழுவினரை அனுப்பி வைத்திருக்கலாமே என்றார்கள். நூல் : இபுனு மாஜா

இந்த ஹதீஸின் வழியே திருமண இல்லத்தில் நறுமணப் பாடல்களை பாடி மகிழுவது அங்கீகரிக்கப்

பட்டதே என்பது தெளிவாகிறது. மரணவீட்டில் மாமறையை ஓதச் சொன்ன மாநபியவர்கள் தான் மணவீட்டில் கினா எனும் பாடல் படிக்கச் சொன்னார்கள் எனவே மங்கலம், அமங்கலம் என வகைபாடியவர்கள் இதற்கு என்ன சொல்வார்கள்?.

## மஜ்லிஸில் வைக்கப்படும் உணவுகள்

**? குற்றச்சாட்டு**

குறைகூறுவதும், விமர்சனம் பேசுவதுமே தம் நேரப் போக்காக எடுத்துக் கொண்ட வஹ்ஹாபியப் பார்வையின் பாதிப்பு, பரக்கத்தை நாடி மஜ்லிஸ்களிலே வைக்கப்படும் உணவு பலகாரங்களையும் விட்டு வைக்கவில்லை.

மஜ்லிஸிலே வைக்கப்படும் பலகாரங்களை, பிறமத கலாச்சாரங்களோடு ஒத்திருப்பதாக இவர்களே கற்பனை செய்து தவறான பிரச்சாரம் செய்கின்றனர்.

**✍ விளக்கம்**

இவர்களால் எடுத்து வைக்கப்படும் இழிவான இவ்வாதத்தை ஆய்வுப் பொருளாக எடுத்து சீர்தூக்கு வோமானால் அவர்களின் வீராப்பு முனைகள் மழுங்கி அவர்களின் அழுக்கு வாதங்களின் இழுக்குத் தோற்றம் அம்பலமாவதையும் அறிய முடிகிறது.

பிறசமய சகோதரர்கள் தம் வாழிபாட்டு தலங்களான கோவில்களை சுற்றிவருகின்றனர். கருங்கல்லை முத்த மிடுகின்றனர். தெய்வ வழிபாட்டை மூலதனமாகக் கொண்டு மொட்டை போடுகின்றனர். ஆடு, மாடுகளை அறுத்து பலியிடுகின்றனர்.

ஆனால் அதே நிகழ்வுகள் இனிய இஸ்லாத்தின் இன்பக் கடமையான புனித ஹஜ்ஜிலே வலம் வருதல், ஹஜருல் அஸ்வதை முத்தமிடுதல், மொட்டை அடித்தல், குர்பானி கொடுத்தல் என்று இடம் பெற்றிருக்கின்றனவே அவைகளை குறித்த அவர்களின் வாதம் என்னவோ?

இந்து சகோதரர்களிடம் கார்த்திகை நோன்பு, அவ்வை நோன்பு போன்ற விரதங்களை அமுலில் இருக்கத்தான் செய்கிறது.

பிற சமயத்தவரின் வழிபாடு என்று கூறி நோன்பு பிடிப்பதையும் வம்பு பேசுவார்களோ?

மூஸா நபிக்கு இறைவன் வழங்கிய வெற்றியை நினைவுபடுத்தும் முகமாக முஹர்ரம் மாதம் ஒன்பதாம் நாள் யூதர்கள் நோன்பு நோற்று வந்தனர்.

அதை கண்ணுற்ற கண்மணி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அடுத்த ஆண்டு இரண்டு நோன்புகள் நோற்பேன் என்று தானே சொன்னார்கள்.

யூத மத வழிபாட்டு நோன்பை இஸ்லாத்திலும் ஏற்படுத்தப் பட்டுவிட்டது என்று எக்காளமிடுவார்களோ? இன்னும் எத்தனையோ பிறமத காலாச்சாரங்கள் அவர் களின் அன்றாட வாழ்விலேயே அரங்கேறுகிறது அதிலெல் லாம் காணாத குறை. மௌலிதில் மட்டும் இவர்களுக்கு தென்படுகிறது.

? குற்றச்சாட்டு

சற்றுவரை சாதாரண பேரிச்சம்பழமாக, வாழைப் பழமாக இருந்தது மஜ்லிஸிலே வைக்கப்பட்டவுடன் அதன் மீதுபக்தி ஏற்பட்டு அதை பெறுவதில் முண்டியடித்து போட்டி போடுகின்றனர்.

ஒரேயொரு பேரீச்சம்பழத்திற்காக பெரும் செல்வந்தர் களெல்லாம் வரிசையில் காத்து கிடக்கின்றனர். என்பது அவர்களின் கேள்வியாகும்

✍ விளக்கம்

கோடிக்கோடியாக கொட்டிக் கிடந்தும் ஒரு பேரிச்சம் பழத்தை பெறுவதற்காக போட்டியிடு கின்றனர் என்றால் அதன் மகிமை அவர்களுக்கு தெரிந்துள்ளது என்று தானே பொருள்.

மூக்கின் கோளாறை விட்டு விட்டு மலரின் மணத்தை குறை சொல்வதாகவன்றோ இருக்கிறது இக்கேள்வி.

ஆனால் பூமான் நபியின் புனித அவையில் பலகாரங்கள் முன் வைக்கப்பட்டு அதன் மூலம் அப்பொருள்களில் அபிவிருத்தி ஏற்பட்ட வரலாறு ஹதீஸ் கிரந்தம் நெடுகிலும் காணக் கிடைக்கிறது. உதாரணத்திற்கொன்றை முன் வைக்கிறோம்.

அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள் நாங்கள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் ஒரு பயணத்தில் சென்று கொண்டிருந்தோம். அந்நேரம் கூட்டத்தினரின் உணவு தீர்ந்து விட்டது.

எனவே உணவுக்காக சில ஒட்டகங்களை அறுக்கலாம் என ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எண்ணியபோது, ஹழ்ரத், உமர் ரலியல்லாஹு அன்ஹு முன்வந்து, யாரசூலல்லாஹ் கூட்டத்தினரிடம் இருக்கும் பொருள்களை ஒன்று சேர்த்து அதை (அதிகமாக்கி தருமாறு) அல்லாஹ்விடம் பிரார்த்தித்தால் நன்றாக இருக்குமே என்றார்கள்.

ஆலோசனையை அங்கீகரித்த அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அவ்வாறே செய்தார்கள். கோதுமைகளும் பேரித்தம் பழங்களுமாக,

அதன் கொட்டைகளுமாக அவரவர்கள் வைத்திருந் தவற்றை கொண்டு வந்தனர்.

முஜாஹித் ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகிறார்கள். பேரித்தம் பழக்கொட்டைகளை வைத்து என்ன செய்வது என்று கேட்டேன்.

அதை நன்றாக உறிஞ்சிவிட்டு தண்ணீர் குடிப்பார்கள் என பதிலளித்தார்கள்.

பின்னர் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் துஆ செய்தார்கள். பாத்திரங்கள் எல்லாம் நிரம்பிவிட்டன. பின்னர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள். அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியன் யாருமில்லை. நான் அல்லாஹ்வுடைய ரசூலாக இருக்கிறேன் என சாட்சி கூறுகிறேன் இந்த இரு விஷயங்களிலும் சந்தேகம் கொள்ளாத அடியான் சொர்க்கத்தில் நுழைந்தே தவிர அல்லாஹ்வை சந்திக்க மாட்டான் நூல் : முஸ்லிம் ஷரீப்

மேற்கண்ட இப்பொன்மொழியை நன்றாக ஆய்வு செய்து பாருங்கள்.

மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் துஆச் செய்தால் அந்த பாத்திரங்கள் எங்கிருந்தாலும் நிரம்பி விடும் என்ற உண்மை உத்தமர் உமர் ரலியல்லாஹு

அன்ஹு அவர்கள் அறியாத தகவல்லல.

ஆனாலும் உணவுப் பொருட்கள் மஜ்லிஸிலே வைக்கப்பட்டு துஆச் செய்வது அருள்மார்க்கம் இஸ்லாத்தில் அங்கீகரிக்கப்பட்டதே என்பதை அறிவுறுத்தும் முகமாகவன்றோ இந்நிகழ்வு இடம் பெற்றுள்ளது.

சாதாரண பேரிச்சம் பழம் மஜ்லிஸில் வைக்கப்பட்டால் அது தபர்ருக்காக மாறி விடுகிறது என்று ஏளனம் பேசியவர்கள் இந்த பொன்மொழிக்கு என்ன வியாக்கியானம் செய்வார்களோ?

**? குற்றச்சாட்டு**

மௌலிது காவியங்கள் மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை இறை நிலைக்கு உயர்த்துகின்றனர் என ஒப்பாரி வைக்கின்றனர்.

**✍ விளக்கம்**

இறைவனின் நிலை என்பது மனித கற்பனைகளுக்கு அப்பாற்பட்டது. ஆனால் அதையே கற்பனை செய்து இதுதான் இறை நிலை என ஒருவர் வாதிட்டால் அவரின் ஈமானின் நிலை பரிசிலிக்கப்பட வேண்டியதல்லவா?

அல்லாஹ்வின் அந்தஸ்த்தை அறிந்தால் அல்லவா அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை அந்த அந்தஸ்த்திற்கு புகழ முடியும்.

அப்படியில்லாத போது அல்லாஹ்வின் நிலைக்கு அண்ணல் நபியை உயர்த்திப் பார்க்கிறார்கள் என வாதிடுவது அர்த்தமற்ற வாதமாகும்.

அறிவுடையோர்களால் இதை அங்கீகரிக்க முடியாது.

## மஸ்ஜிதில் கூடி அமர்ந்து ஓதுதல்

நிச்சயமாக இறையில்லங்கள் எல்லாம் அல்லாஹ்வுக் குரியதே. ஆகவே (அங்கு) அல்லாஹ்வுடன் மற்றெவனரயும் அழைக்காதீர்கள் (72 / 18) இந்த வசனத்தைக் கூறி பள்ளிவாசல்களில் மௌலிது ஓதக் கூடாது என ஓலமிடுகின்றனர்.

**விளக்கம்**

மௌலிதே ஓதக் கூடாது என்று கூறுபவர்களுக்கு அது எங்கு ஓதினால் என்ன?

மேலும் இவ்வசனத்திற்கு அவர்கள் தரும் பொருளே பொருத்தமற்றதாகும்.

இறையில்லங்களில் அல்லாஹ்வுடன் வேறு எவரையும் வணங்காதீர்கள் என்பதுதான் பொருத்தமான பொருளாகும்.

மேலும் மஸ்ஜிதில் கூடியமர்ந்து மாநபியை, மற்றும் மாண்போர்களை புகழலாம் என்பதை உணர்த்தும் தகவலை பாருங்கள்.

ஒரு முறை மாநபியின் மஸ்ஜிதில் மாண்புயர் ஸஹாபிகள் குழுமியமர்ந்து சம்பாஷித்துக் கொண்டிருந் தனர்.

அவர்களில் சிலர் அல்லாஹ், நபி இப்ராஹீம் அலைஹி ஸ்ஸலாம் அவர்களை நண்பராக தேர்ந்தெடுத்தது ஆச்சரியமே, என்றனர். நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களோடு அல்லாஹ் வசனித்தது ஆச்சரியமே என்றனர் சிலர்.

நபி ஈசா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அவனின் வார்த்தையாகவும் ரூஹாகவும் இருப்பது ஆச்சரியமே என்றனர் இன்னும் சிலர்.

ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை அல்லாஹ் தேர்ந்தெடுத்ததுதான் ஆச்சரியம் என்றனர் சிலர்.

அவர்களை அண்மித்து வந்த அருமை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், தோழர்களே, உங்களது பேச்சையும் நீங்கள் ஆச்சரியப்பட்டதையும் அவதானித்தேன்.

நீங்கள் சொன்ன அனைத்துமே உண்மைதான். ஆனால் நான் யார் தெரியுமா? நான் அவனின் ஹபீபாக உயரிய நேசராக இருக்கிறேன். இதனை பெருமைக்கா சொல்லவில்லை (என்றார்கள்) (திர்மிதி.)

நீண்ட இந்த ஹதீஸின் முற்பகுதி மட்டுமே உரைக்கப் பட்டிருக்கிறது.

இந்த ஹதீஸின் மூலம், மஸ்ஜிதில் கூடி அமர்ந்து முன்னோர்களின் புகழ் பாடலாம் என்பது தெளிவு பெறுகிறது.

இப்படி எத்தனை எத்தனையோ ஆதாரங்கள் உள்ளன. ஆயினும் அறிவுடையோருக்கு ஒருசான்றே போதுமானதாகும். அல்லாதவருக்கு எத்தனை ஆதாரங்கள் கூறினும் அது விழலுக்கு இரைத்த நீர் போன்றேயாகும்.

மாநபியின் மீது மாறாத அன்புக் கொண்டோருக்கு ஆதாரம் எல்லாம் அவசியம் இல்லை.

அது அல்லாதவருக்கு ஆதாரம் கூறினாலும் பிரயோஜனம் இல்லை.

வாதத்திற்கு மருந்துண்டு. பிடிவாதத்திற்கு மருந்தில்லை.

எனவே இதுவரைத் தரப்பட்ட தகவல்களை இதயத்தில் நிறுத்தி பூமான் நபியைப் புகழ்ந்து புனிதம் பெறுவோமாக.

வல்ல நாயன், அந்த நஸீபை நம் யாவருக்கும் வழங்கி, நம்மை சத்திய வழியில் செலுத்துவானாக ஆமீன்.

ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
யாரப்பி ஸல்லி அலைஹி வஸல்லிம்.

பொருளடக்கம்

# மாநபியின் மௌலித் ஷரீப் மார்க்கத்திற்கு அரணா? முரணா?

*


ஆக்கம்

மௌலவி, அல்ஹாஜ், அல்ஹாபிழ்

T.S.A. செய்யிது அபூதாஹிர்

மஹ்ழரி, பாஜில் ஜமாலி

காயல் பட்டணம்.


*


வெளியீடு

ஃபஹீமியா பப்ளிஷர்ஸ்

கான்காயே பஹீமிய்யா

409/3-89D, காயிதே மில்லத் தெரு,

வள்ளலார் நகர் கூடுவாஞ்சேரி : 603 202,

சென்னை.

போன் : 04114 267213.